# مقرر الدورة

# 2

# பாடப் புத்தகம்

| | | |
|---|---|---|
| தமிழில் | : | மவ்லவி இம்ரான் (கபூரி) |
| மீள்பரிசீலனை | : | எம். அஹ்மத் (அப்பாஸி) |

ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد


المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

بسم الله الرحمن الرحيم

# அகீதா

## 2

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம் அஹ்மத் (அப்பாஸி)

# توحيد

(باللغة التاملية)

ترجمة: محمد عمران بن جمال الدين
مراجعة : أحمد بن محمد

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة
ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH
P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | லாஇலாஹ இல்லல்லாஹ்வின் விளக்கம் (1) | 45 நிமிடங்கள் |
| 2 | லாஇலாஹ இல்லல்லாஹ்வின் விளக்கம் (2) | 45 நிமிடங்கள் |
| 3 | முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்வின் விளக்கம் (1) | 45 நிமிடங்கள் |
| 4 | முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்வின் விளக்கம் (2) | 45 நிமிடங்கள் |
| 5 | தௌஹீதின் வகைகள்- ருபூபிய்யா (1) | 45 நிமிடங்கள் |
| 6 | ருபூபிய்யா (2) | 45 நிமிடங்கள் |
| 7 | உலூஹிய்யா | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | வணக்கம் என்பதன் விளக்கம் | 45 நிமிடங்கள் |
| 10 | இணைவைப்பின் பிரதான காரணம் நல்லடியார்கள் விடயத்தில் அளவு மீறுதலே | 45 நிமிடங்கள் |
| 11 | தௌஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிபாத் (1) | 45 நிமிடங்கள் |
| 12 | தௌஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிபாத் (2) | 45 நிமிடங்கள் |
| 13 | இஸ்லாத்தை முறிப்பவை (1) | 45 நிமிடங்கள் |
| 14 | இஸ்லாத்தை முறிப்பவை (2) | 45 நிமிடங்கள் |
| 15 | முன்னர் கற்ற பாடங்களை மீட்டல் | 45 நிமிடங்கள் |

# லாஇலாஹ இல்லல்லாஹ்வின் பொருள்

## அதன் பொருளும் நிபந்தனைகளும்

(லாஇலாஹ இல்லல்லாஹ்) அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை என்ற இக்கலிமா சுவர்க்கத்தின் திறவுகோலாகும். ஒவ்வொரு திறப்பிற்கும் பற்கள் இருப்பது அவசியமே. பற்களின்றி எந்த திறவுகோலும் எதனையும் திறக்காது.

இந்த (லாஇலாஹ இல்லல்லாஹ் என்கிற) திருக்கலிமாவிற்குரிய பற்களாக அதன் நிபந்தனைகள் இருக்கின்றன. அவையாவன:

## 1-அதன் பொருளை அறிதல்

அதாவது உண்மையில் வணங்கப்படுவதற்குரிய தகுதியை அல்லாஹ்வைத் தவிர உள்ள அனைவர்களை விட்டும் நீக்கி அத்தகுதியை அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்குவதாகும்.
இறைவன் கூறுகிறான் :

﴿فَٱعۡلَمۡ أَنَّهُۥ لَآ إِلَٰهَ إِلَّا ٱللَّهُ وَٱسۡتَغۡفِرۡ لِذَنۢبِكَ وَلِلۡمُؤۡمِنِينَ وَٱلۡمُؤۡمِنَٰتِۗ وَٱللَّهُ يَعۡلَمُ مُتَقَلَّبَكُمۡ وَمَثۡوَىٰكُمۡ﴾ محمد: ١٩

***ஆகவே, நிச்சயமாக அல்லாஹ்வைத் தவிர (வேறு) நாயன் இல்லை என்று நீர் அறிந்து கொள்வீராக் இன்னும் உம்முடைய பாவத்திற்காகவும், மு.்.மின்களாகன ஆண்களுக்காகவும், பெண்களுக்காகவும் (பாவ) மன்னிப்புத் தேடுவீராக - அன்றியும் உங்களுடைய நடமாட்டத்தலத்தையும் உங்கள் தங்குமிடங்களையும் அல்லாஹ் நன்கறிகிறான்.*** (முஹம்மத் :19) அதாவது வானங்கள் மற்றும் பூமியில் உண்மையில் வணங்கப்படுவதற்குரிய தகுதி அல்லாஹ்வைத்தவிர யாருக்கும் கிடையாது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ""அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் யாரும் இல்லை என்பதை விளங்கிய நிலையில் யாரேனும் மரணித்தால் அவர் சுவர்க்கம் செல்வார்"".
(அறிவிப்பவர் : உஸ்மான் (ரலி) . ஆதாரம் : முஸ்லிம் 26)

## 2-சந்தேகமின்றி உறுதி கொள்ளல்:

அதாவது இக்கலிமாவை உள்ளம் சந்தேகமின்றி உறுதி கொண்டதாக இருத்தல்.
அல்லாஹ் கூறுகிறான்:

﴿إِنَّمَا ٱلۡمُؤۡمِنُونَ ٱلَّذِينَ ءَامَنُواْ بِٱللَّهِ وَرَسُولِهِۦ ثُمَّ لَمۡ يَرۡتَابُواْ وَجَٰهَدُواْ بِأَمۡوَٰلِهِمۡ وَأَنفُسِهِمۡ فِي سَبِيلِ ٱللَّهِۚ أُوْلَٰٓئِكَ هُمُ ٱلصَّٰدِقُونَ﴾ الحجرات: ١٥

***நிச்சயமாக, (உண்மையான) மு.்.மின்கள் யார் என்றால், அவர்கள் அல்லாஹ்வின் மீதும், அவனுடைய தூதர் மீதும், ஈமான் கொண்டு, பின்னர் (அது பற்றி அவர்கள் எத்தகைய) சந்தேகமும் கொள்ளாது, தம் செல்வங்களைக் கொண்டும், தம் உயிர்களைக் கொண்டும் அல்லாஹ்வின் பாதையில் தியாகம் செய்வார்கள் - இத்தகையவர்கள் தாம் உண்மையாளர்கள்.*** (அல்ஹுஜ்ராத்:15)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ""வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும், நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய தூதர் என்றும் சந்தேகமின்றி சான்று பகர்ந்த நிலையில் எந்த அடியார் அல்லாஹ்வை சந்திக்கின்றாரோ அவர் சுவர்க்கத்தை விட்டும் தடுக்கப்படமாட்டார்"". (அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி) . ஆதாரம் முஸ்லிம் 27)

## 3-அக்கலிமா எதை எதிர்பாக்கிறதோ அதை நாவாலும் மனதாலும் ஒப்புக் கொள்ளல்:

அல்லாஹ் இணைவைப்பாளர்களின் கூற்றை எடுத்துக் கூறும் போது பின்வருமாறு கூறுகிறான்:

﴿إِنَّهُمْ كَانُوٓا۟ إِذَا قِيلَ لَهُمْ لَآ إِلَٰهَ إِلَّا ٱللَّهُ يَسْتَكْبِرُونَ ﴿٣٥﴾ وَيَقُولُونَ أَئِنَّا لَتَارِكُوٓا۟ ءَالِهَتِنَا لِشَاعِرٍ مَّجْنُونٍۭ﴾ الصافات: ٣٥ - ٣٦

***வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று அவர்களிடம் கூறப்பட்ட போது அவர்கள் தற்பெருமை கொண்டார்கள். மேலும் கூறினார்கள் பைத்தியம் பிடித்த ஒரு கவிஞருக்காக எங்களுடைய தெய்வங்களை நாங்கள் கைவிட்டுவிடுவோமா என்ன?*** (அஸ்ஸப்பாத்:35-36)

தற்பெருமை கொண்டார்கள் என்றால் மூ∴மின்கள் கூறுவதைப் போல கூறுவதை விட்டும் தற்பெருமை கொண்டார்கள் என்று இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் விளக்கமளித்துள்ளார்கள்.

""மனிதர்கள் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறும் வரை அவர்களுடன் போர் புரிய வேண்டும் என்று நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்.வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லை என்று யாரேனும் கூறிவிட்டால் தனது உயிர் உடைமைகளை என்னிடமிருந்து அவர் பாதுகாத்துக் கொள்வார் இஸ்லாத்தின் வேறு உரிமைகளில் (அவர் வரம்பு மீறினாலே) தவிர! மேலும் அவரது விசாரணை இறைவனிடமே உள்ளது"" என நபியவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி). ஆதாரம் : புகாரி 2946 முஸ்லிம் 33)

## 4. அக்கலிமா எதை அறிவித்து விட்டதோ அதனைப் புறக்கணிக்காமல் அதற்கு முற்றிலும் கீழ்ப்படிதல்

இறைவன் கூறுகிறான் :

﴿وَأَنِيبُوٓا۟ إِلَىٰ رَبِّكُمْ وَأَسْلِمُوا۟ لَهُۥ مِن قَبْلِ أَن يَأْتِيَكُمُ ٱلْعَذَابُ ثُمَّ لَا تُنصَرُونَ﴾ الزمر: ٥٤

***ஆகவே (மனிதர்களே!) உங்களுக்கு வேதனை வரும் முன்னரே நீங்கள், உங்கள் இறைவன் பால் திரும்பி, அவனுக்கே முற்றிலும் வழிபடுங்கள் (வேதனை வந்துவிட்டால்) பின்பு நீங்கள் உதவி செய்யப்பட மாட்டீர்கள்.*** (அஸ்ஸுமர் : 54)

மேலும் கூறுகின்றான் :

﴿فَلَا صَدَّقَ وَلَا صَلَّىٰ﴾ القيامة: ٣١

***ஆனால் (அம்மனிதனோ சன்மார்க்கத்தின் மீது) உறுதிகொள்ளவுமில்லை, அவன் தொழவுமில்லை.*** (அல் கியாமா : 31).

## 5-வாய்மை உறுதி கொண்டு அதில் உண்மையாளதாகவே இருத்தல்:

அதாவது அத்திருக்கலிமாவை உளப்பூர்வமாக வாய்மையோடு சொல்லுதல். அல்லாஹ் தஆலா கூறுகிறான் :

﴿الٓمٓ ﴿١﴾ أَحَسِبَ ٱلنَّاسُ أَن يُتْرَكُوٓا۟ أَن يَقُولُوٓا۟ ءَامَنَّا وَهُمْ لَا يُفْتَنُونَ ﴿٢﴾ وَلَقَدْ فَتَنَّا ٱلَّذِينَ مِن قَبْلِهِمْ ۖ فَلَيَعْلَمَنَّ ٱللَّهُ ٱلَّذِينَ صَدَقُوا۟ وَلَيَعْلَمَنَّ ٱلْكَٰذِبِينَ﴾ العنكبوت: ١ - ٣

***அலிப், லாம், மீம் நாங்கள் ஈமான் கொண்டிருக்கிறோம் என்று கூறுவதால் மட்டும் அவர்கள் சோதிக்கப்படாமல் விட்டு விடப்படுவார்கள் என்று மனிதர்கள் எண்ணிக் கொண்டார்களா? நிச்சயமாக நாம் அவர்களுக்கு முன்னிருந்தவர்களையும் சோதித்திருக்கறோம். ஆகவே***

***உண்மையுரைப்பவர்களை அல்லாஹ் நிச்சயம் அறிவான். இன்னும் பொய்யர்களையும் அவன் நிச்சயமாக அறிவான்".*** (அல்அன்கபூத் 1-3)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ""வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவனது அடியாரும் தூதரும் ஆவார்கள் என்று யார் உண்மையான உள்ளத்துடன் சான்று பகர்கின்றாரோ அல்லாஹ் அவருக்கு நரகத்தை ஹராமானதாக ஆக்கி விடுகிறான்"". (அறிவிப்பவர் : அனஸ் (ரலி). ஆதாரம் : புகாரி 128 முஸ்லிம் 53)

## 6- உளத்தூய்மை

உளத்தூய்மை என்பது தூய எண்ணத்தைக் கொண்டு இணை வைத்தலின் அனைத்து சாயல்களை விட்டும் எமது செயல்களைச் சுத்தப்படுத்துவதாகும். அல்குர்ஆனில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

﴿وَمَآ أُمِرُوٓاْ إِلَّا لِيَعۡبُدُواْ ٱللَّهَ مُخۡلِصِينَ لَهُ ٱلدِّينَ حُنَفَآءَ وَيُقِيمُواْ ٱلصَّلَوٰةَ وَيُؤۡتُواْ ٱلزَّكَوٰةَۚ وَذَٰلِكَ دِينُ ٱلۡقَيِّمَةِ﴾ **البينة: ٥**

***அல்லாஹ்வுக்கு வணக்கத்தை தூய்மையாக்கியவர்களாக (தவறான வழியிலிருந்து விலகி சரியான வழியில்) பிடிப்புள்ளவர்களாக அல்லாஹ்வை அவர்கள் வணங்க வேண்டும், மேலும் தொழுகையை அவர்கள் நிலைநாட்டவேண்டும், மேலும் ஜகாத்தை அவர்கள் வழங்க வேண்டும் என்பதைத் தவிர (வேறெதுவும்) அவர்களுக்குக் கட்டளையிடப்படவில்லை. இதுதான் நேரான மார்க்கமாகும்.*** (அல்பய்யினா : 5)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ""யார் (லாஇலாஹ இல்லல்லாஹ்) என்ற கலிமாவை உளத்தூய்மையுடன் கூறுகிறாரோ அவரே என்னுடைய ஷபாஅத்திற்கு மிகவும் அருகதையுடையவராவார். (அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி). ஆதாரம் : புகாரி 99)
மேலும் கூறினார்கள்: ""யார் அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி (லாஇலாஹ இல்லல்லாஹ்) என்ற கலிமாவைக் கூறுகிறாரோ அவருக்கு அல்லாஹ் நரகத்தைத் தடை செய்து விடுகிறான்"". (அறிவிப்பவர் : மஹ்மூத் பின் ரபீ. (ரலி). ஆதாரம் : புகாரி 425 முஸ்லிம் 263)

## 7- நேசித்தல்:

இவ்வழகிய திருக்கலிமாவையும் இதன் தேட்டத்தையும் இது எதை அறிவிக்கின்றதோ அதையும், இக்கலிமாவின் நிபந்தனைகளை பற்றிப் பிடித்துக் கொண்டு இக்கலிமாவின் பிரகாரம் செயல்படக்கூடியவர்களையும் நேசிக்க வேண்டும். மேலும் இதற்கு எதிரானவற்றை வெறுக்கவும் வேண்டும்.
இறைவன் கூறுகிறான் :

﴿وَمِنَ ٱلنَّاسِ مَن يَتَّخِذُ مِن دُونِ ٱللَّهِ أَندَادٗا يُحِبُّونَهُمۡ كَحُبِّ ٱللَّهِۖ وَٱلَّذِينَ ءَامَنُوٓاْ أَشَدُّ حُبّٗا لِّلَّهِۗ وَلَوۡ يَرَى ٱلَّذِينَ ظَلَمُوٓاْ إِذۡ يَرَوۡنَ ٱلۡعَذَابَ أَنَّ ٱلۡقُوَّةَ لِلَّهِ جَمِيعٗا وَأَنَّ ٱللَّهَ شَدِيدُ ٱلۡعَذَابِ﴾ **البقرة: ١٦٥**

***அல்லாஹ் அல்லாதவர்களை அவனுக்கு இணையாக வைத்துக் கொண்டு, அவர்களை அல்லாஹ்வை நேசிப்பதற்கொப்ப நேசிப்போரும் மனிதர்களில் இருக்கிறார்கள். ஆனால் நம்பிக்கை கொண்டவர்கள் அல்லாஹ்வை நேசிப்பதில் உறுதியான நிலையுள்ளவர்கள் இன்னும் (இணை வைக்கும்) அக்கிரமக்காரர்களுக்குப் பார்க்க முடியுமானால், (அல்லாஹ் தரவிருக்கும்) வேதனை எப்படியிருக்கும் என்பதைக் கண்டு கொள்வார்கள். அனைத்து வல்லமையும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது. நிச்சயமாக தண்டனை கொடுப்பதில் அல்லாஹ் மிகவும் கடுமையானவன் (என்பதையும் கண்டு கொள்வார்கள்).*** (அல்பகறா : 165)

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ""யாரிடத்தில் மூன்று தன்மைகள் காணப்படுமோ அவர் ஈமானின் சுவையை உணர்ந்தவராவார்.

1. அல்லாஹ்வும் ரஸூலும் மற்ற எல்லாவற்றையும் விடவும் நேசத்திற்குரியவர்களாக ஆவது.
2. ஒருவர் மறறொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது.
3. குப்ரிலிருந்து அல்லாஹ் அவரை விடுவித்த பின் நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பது போல் இறை நிராகரிப்புக்கு (குப்ருக்கு) திரும்பிச் செல்லுவதை வெறுப்பது"". (அறிவிப்பவா் : அனஸ் (ரலி). ஆதாரம் : புகாரி 16 முஸ்லிம் 67)

**8. அல்லாஹ்வையன்றி வணங்கப்படக்கூடிய தாகூத்கள் அனைத்தையும் நிராகரித்து அல்லாஹ்வை உண்மையான இறைவனாக நம்புவது.**

அல்லாஹ் கூறுகிறான்:

﴿لَآ إِكۡرَاهَ فِي ٱلدِّينِۖ قَد تَّبَيَّنَ ٱلرُّشۡدُ مِنَ ٱلۡغَيِّۚ فَمَن يَكۡفُرۡ بِٱلطَّٰغُوتِ وَيُؤۡمِنۢ بِٱللَّهِ فَقَدِ ٱسۡتَمۡسَكَ بِٱلۡعُرۡوَةِ ٱلۡوُثۡقَىٰ لَا ٱنفِصَامَ لَهَاۗ وَٱللَّهُ سَمِيعٌ عَلِيمٌ﴾ البقرة: ٢٥٦

*மார்க்கத்தில் எத்தகைய நிர்ப்பந்தமுமில்லை. (ஏனெனில்) வழிகேட்டிலிருந்து நேர்வழி திட்டமாகத் தெளிவாகிவிட்டது. ஆகவே எவர் தாகூதை (ஷைத்தானை) நிராகரித்து விட்டு அல்லாஹ்வை விசுவாசிக்கின்றாரோ அவர் திட்டமாக அறுந்துபோகாத பலமான கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டார். மேலும் அல்லாஹ் செவியேற்கிறவன் நன்கறிகிறவன்.''* (அல்பகறா : 256)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ""யார் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறி, அவனன்றி வணங்கப்படக்கூடியதை நிராகரிக்கின்றாரோ அவரது உயிரும் உடைமையும் ஹராமானதாகும்"". (அறிவிப்பவா் : தாரிக் பின் அஷ்யம் (ரலி). ஆதாரம் : முஸ்லிம் 37)

# முஹம்மது ரஸூலுல்லாஹ்வின் பொருள்

முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வினால் அனுப்பப்பட்டவர்கள் என ஈமான் கொள்ள வேண்டும். அவர்கள் எவற்றை கூறினார்களோ அவற்றை உண்மைப்படுத்த வேண்டும். அவர்கள் ஏவியவைகளுக்குக் கட்டுப்பட வேண்டும், அவர்கள் தடுத்தவற்றை விட்டு விலகி நடக்க வேண்டும். அவர்கள் காட்டிய பிரகாரம் அல்லாஹ்வை வழிப்பட வேண்டும், மேலும் அவர்கள் இறுதித் தூதர் எனவும் அவர்கள் கொண்டு வந்த தூது மனித, ஜின் இனங்களுக்கு பொதுவானவை எனவும் நம்பிக்கை கொள்ள வேண்டும். மேலும் அவர்களை நேசித்து, மதித்து அவர்களுக்கு உதவ வேண்டும். நபி (ஸல்) அவர்களின் ஏவல் விலக்கல்களை மகத்துவப்படுத்துவதும் அதாவது அவற்றை நடைமுறைப்படுத்துவதும் அவர்களின் மார்க்கத்தை பற்றிப்பிடிப்பதும் கடமையாகும். ஏனென்றால் லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவின் உண்மையான பொருளை வாய்மையுடன் எடுத்துரைத்தவர் அவர்கள் தான். இது எந்த இறைவன், நபி (ஸல்) அவர்களை பொதுவாக எல்லா மக்களுக்கும் சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி சொல்பவராகவும், நரகத்தை விட்டும் எச்சரிக்கை செய்பவராகவும், அல்லாஹ்வின் அனுமதியுடன் அவன் பக்கம் அழைக்கக்கூடியவராகவும், பிரகாசிக்கக்கூடிய ஒளிவிளக்காகவும் அனுப்பி வைத்தானோ அந்த இறைவனின் கட்டளைகளை ஏற்று நடப்பதாக அமைகின்றது.

## நபி (ஸல்) அவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகள்

### 1-நபி (ஸல்) அவர்களை உண்மைப்படுத்துவது.

இறைவன் கூறுகிறான் :

﴿وَمَا يَنطِقُ عَنِ ٱلۡهَوَىٰٓ ۝٣﴾ النجم: ٣

***அவர் தனது இச்சைப்படி எதையும் பேசுவதில்லை."*** (அந்நஜ்ம் : 3)

### 2-அவர்களைப் பின்பற்றுவது.

இறைவன் கூறுகிறான் :

﴿قُلۡ إِن كُنتُمۡ تُحِبُّونَ ٱللَّهَ فَٱتَّبِعُونِي يُحۡبِبۡكُمُ ٱللَّهُ وَيَغۡفِرۡ لَكُمۡ ذُنُوبَكُمۡۚ وَٱللَّهُ غَفُورٞ رَّحِيمٞ﴾ آل عمران: ٣١

***(நபியே மனிதர்களிடம்) நீர் கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னை நீங்கள் பின்பற்றுங்கள். (அவ்வாறு நீங்கள் செய்தால்) உங்களை அல்லாஹ் நேசிப்பான், உங்கள் பாவங்களையும் உங்களுக்காக அவன் மன்னித்துவிடுவான். அல்லாஹ் மிக்க மன்னிப்பவன், மிகக் கிருபையுடையவன்.*** (ஆலஇம்ரான் : 31).

﴿لَّقَدۡ كَانَ لَكُمۡ فِي رَسُولِ ٱللَّهِ أُسۡوَةٌ حَسَنَةٞ﴾ الأحزاب: ٢١

***அல்லாஹ்வின் தூதரிடத்தில் திட்டமாக உங்களுக்கு அழகிய முன்மாதிரி இருக்கிறது."*** (அல்அஹ்ஸாப் : 21)

﴿قُلۡ يَٰٓأَيُّهَا ٱلنَّاسُ إِنِّي رَسُولُ ٱللَّهِ إِلَيۡكُمۡ جَمِيعًا ٱلَّذِي لَهُۥ مُلۡكُ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِۖ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ يُحۡيِۦ وَيُمِيتُۖ فَـَٔامِنُواْ بِٱللَّهِ وَرَسُولِهِ ٱلنَّبِيِّ ٱلۡأُمِّيِّ ٱلَّذِي يُؤۡمِنُ بِٱللَّهِ وَكَلِمَٰتِهِۦ وَٱتَّبِعُوهُ لَعَلَّكُمۡ تَهۡتَدُونَ﴾ الأعراف: ١٥٨

***நபியே நீர் கூறுவீராக! மனிதர்களே! நிச்சயமாக நான் உங்கள் யாவருக்கும் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறேன். அவன் எத்தகையவனென்றால், வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியது, வணக்கத்திற்குரியவன் அவனைத் தவிர (வேறு எவரும்) இல்லை. அவனே உயிர்ப்பிக்கிறான் அவனே மரணிக்கச் செய்கிறான். ஆகவே அந்த அல்லாஹ்வையும் (எழுதப் படிக்கத் தெரியாத) உம்மி நபியாகிய அவனுடைய இத்தூதரையும் நீங்கள்***

***விசுவாசிப்பீர்களாக. அவர் எத்தகையவரென்றால் அல்லாஹ்வையும் அவனுடைய வசனங்களையும் விசுவாசிக்கிறார் (ஆகவே) நீங்கள் நேர்வழி பெறுவதற்காக அவரையே நீங்கள் பின்பற்றுங்கள்.*** (அல்அ.:.ராப்:158)

**3- அவர்களை நேசித்தல்**

இறைவன் கூறுகிறான் :

﴿ قُلْ إِن كَانَ ءَابَآؤُكُمْ وَأَبْنَآؤُكُمْ وَإِخْوَٰنُكُمْ وَأَزْوَٰجُكُمْ وَعَشِيرَتُكُمْ وَأَمْوَٰلٌ ٱقْتَرَفْتُمُوهَا وَتِجَٰرَةٌ تَخْشَوْنَ كَسَادَهَا وَمَسَٰكِنُ تَرْضَوْنَهَآ أَحَبَّ إِلَيْكُم مِّنَ ٱللَّهِ وَرَسُولِهِۦ وَجِهَادٍ فِى سَبِيلِهِۦ فَتَرَبَّصُوا۟ حَتَّىٰ يَأْتِىَ ٱللَّهُ بِأَمْرِهِۦ ۗ وَٱللَّهُ لَا يَهْدِى ٱلْقَوْمَ ٱلْفَٰسِقِينَ ﴾ التوبة: ٢٤

***(நபியே விசுவாசிகளிடம்) நீர் கூறுவீராக : உங்களுடைய தந்தைகளும், உங்களுடைய பிள்ளைகளும், உங்களுடைய சகோதரர்களும், உங்களுடைய மனைவியரும், உங்களுடைய குடும்பத்தினரும், நீங்கள் திரட்டிய செல்வங்களும், நஷ்டம் ஏற்பட்டுவிடுமோ என்று நீங்கள் அஞ்சுகின்ற வியாபாரமும், நீங்கள் விரும்புகின்ற இல்லங்களும் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அவனுடைய பாதையில் போர் செய்வதையும் விட உங்களுக்கு மிக பிரியமானவையாக இருக்குமானால் அல்லாஹ் அவனுடைய கட்டளையை (வேதனையை)க் கொண்டுவருவதை எதிர்பார்த்திருங்கள். அல்லாஹ் பாவிகளை நேர்வழியில் செலுத்துவதில்லை."*** (அத்தவ்பா:24).

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ""தனது தந்தை, தனது பிள்ளைகள் இன்னும் பிற மக்கள் யாவரை விடவும் ஒருவருக்கு நான் மிகப் பிரியமானவராக ஆகாதவரை உங்களில் யாரும் (பரிபூரண) ஈமான் கொண்டவராக ஆக முடியாது"". (அறிவிப்பவர் : அனஸ் (ரலி) ஆதாரம் : புகாரி 15 முஸ்லிம் 44)

**4-நபி (ஸல்) காட்டிய வழியில் அல்லாஹ்வை வழிப்படுதல்**

இறைவன் கூறுகிறான் :

﴿وَمَا يَنطِقُ عَنِ ٱلْهَوَىٰٓ ۝٣﴾ النجم: ٣

***அவர் தனது இச்சைப்படி எதையும் பேசுவதில்லை."*** (அந்நஜ்ம் : 3)

மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿مَّن يُطِعِ ٱلرَّسُولَ فَقَدْ أَطَاعَ ٱللَّهَ ۖ وَمَن تَوَلَّىٰ فَمَآ أَرْسَلْنَٰكَ عَلَيْهِمْ حَفِيظًا﴾ النساء: ٨٠

***யார் நபி (ஸல்) அவர்களுக்கு வழிப்படுகிறாரோ அவர் அல்லாஹ்விற்கு வழிப்பட்டவராவார்."*** (அன்னிஸா:80).

**5- நபியைத் துன்புறுத்தாதிருத்தல்**

இறைவன் கூறுகிறான் :

﴿وَمِنْهُمُ ٱلَّذِينَ يُؤْذُونَ ٱلنَّبِىَّ وَيَقُولُونَ هُوَ أُذُنٌ ۚ قُلْ أُذُنُ خَيْرٍ لَّكُمْ يُؤْمِنُ بِٱللَّهِ وَيُؤْمِنُ لِلْمُؤْمِنِينَ وَرَحْمَةٌ لِّلَّذِينَ ءَامَنُوا۟ مِنكُمْ ۚ وَٱلَّذِينَ يُؤْذُونَ رَسُولَ ٱللَّهِ لَهُمْ عَذَابٌ أَلِيمٌ﴾ التوبة: ٦١

***இந்த நபியிடம் எதைச் சொன்னாலும் அவர் கேட்டுக்கொள்பவராகவே இருக்கிறார் என்று கூறி நபியைத் துன்புறுத்துவோரும் அவர்களில் இருக்கின்றனர். (நபியே) நீர் கூறும் நபி அவ்வாறு செவியேற்பது உங்களுக்கே நன்மையாகும். அவர் அல்லாஹ்வை நம்புகிறார் அன்றியும்***

***உங்களில் ஈமான் கொண்டவர்கள் மீது அவர் கருணையுடையவராகவும் இருக்கின்றார். எனவே எவர்கள் அல்லாஹ்வின் தூதரை துன்புறுத்துகின்றார்களோ அவர்களுக்கு நோவினை தரும் வேதனையுண்டு".*** (அத்தவ்பா:61)

இங்கு துன்புறுத்தல் என்ற சொல் நபி (ஸல்) அவர்களையும் அவர்கள் அல்லாஹ்விடமிருந்து கொண்டு வந்த மார்க்கத்தையும் அவர்களுடைய வழிமுறையையும் அவர்களின் குடும்பத்தார்களையும் மூமீன்களுக்கெல்லாம் தாயாக விளங்கக்கூடிய அவர்களின் மனைவிமார்களையும் அவர்களின் தோழர்களையும் துன்புறுத்துவதை உள்ளடக்கியிருக்கிறது.

**6- நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் சொல்லுதல்**

இறைவன் கூறுகிறான் :

﴿إِنَّ ٱللَّهَ وَمَلَٰٓئِكَتَهُۥ يُصَلُّونَ عَلَى ٱلنَّبِيِّۚ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ صَلُّواْ عَلَيۡهِ وَسَلِّمُواْ تَسۡلِيمًا﴾ الأحزاب: ٥٦

***நிச்சயமாக அல்லாஹ்வும், அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்து (அருள் பிரார்த்தனை) செய்கிறார்கள். (ஆகவே) விசுவாசிகளே நீங்கள் அவர் மீது லலவாத்துச் சொல்லுங்கள் ஸலாமும் கூறுங்கள்."*** (அல் அஹ்ஜாப்:56 ).

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ""யார் என் மீது ஒரு முறை ஸலவாத்து கூறுகிறாரோ அல்லாஹ் அவர் மீது பத்து முறை ஸலவாத்து கூறுகிறான்"". (ஆதாரம் முஸ்லிம் 384)

அல்லாஹ் ஸலவாத் கூறுவதன் கருத்து அவன் அருள்புரிவதாகும்.

**ஸலவாத்து கூறும் முறை :**

اَللّٰهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ. اَللّٰهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيْمَ وَعَلَى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ.

இந்த ஹதீஸை க.்.ப் இப்னு உஜ்ரா (ரலி) அறிவிக்கிறார்கள். (புகாரி 6357 முஸ்லிம் 406)

# தௌஹீத் (ஏகத்துவம்)

அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது என்றால் படைத்துப் பரிபாலிப்பதிலும் அவனை வணங்குவதிலும் அவனுடைய திருநாமங்கள் பண்புகளிலும் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவதாகும். மேலும் அவன் தான் அகிலமனைத்தையும் படைத்துப் பரிபாலிப்பவன், அகில உலகத்தையும் ஆட்சி செய்பவன், வணங்குவதற்குத் தகுதியானவன் என்று நம்புவதுமாகும். மேலும் அவனுக்கே உரித்தான சொல் அல்லது செயல் ரீதியான வணக்கமனைத்தையும் அல்லாஹ்விற்கே உரித்தாக்குவதும் தவ்ஹீது ஆகும். தவ்ஹீது தான் இஸ்லாத்தின் அடிப்படையாகும். இதிலிருந்துதான் இஸ்லாத்தினுடைய ஏனைய சட்ட திட்டங்களும் ஏவல் விலக்கல்களும் உருவாகின்றன.

## தௌஹீதின் சிறப்பு

**1- சுவர்க்கத்தில் நுழைவதற்கும் நரகில் இருந்து பாதுகாப்பு பெறுவதற்கும் தௌஹீத் ஓர் அடிப்படைக் காரணமாகும்.**

இறைவன் கூறுகிறான் :

﴿لَقَدْ كَفَرَ ٱلَّذِينَ قَالُوٓا۟ إِنَّ ٱللَّهَ هُوَ ٱلْمَسِيحُ ٱبْنُ مَرْيَمَ ۖ وَقَالَ ٱلْمَسِيحُ يَـٰبَنِىٓ إِسْرَٰٓءِيلَ ٱعْبُدُوا۟ ٱللَّهَ رَبِّى وَرَبَّكُمْ ۖ إِنَّهُۥ مَن يُشْرِكْ بِٱللَّهِ فَقَدْ حَرَّمَ ٱللَّهُ عَلَيْهِ ٱلْجَنَّةَ وَمَأْوَىٰهُ ٱلنَّارُ ۖ وَمَا لِلظَّـٰلِمِينَ مِنْ أَنصَارٍ﴾ المائدة: ٧٢

***நிச்சயமாக அல்லாஹ் அவன் தான் மர்யமுடைய மகன் மஸீஹ் என்று கூறியவர்கள் திட்டமாக நிராகரிப்போராகி விட்டார்கள். (எனினும்) அந்த மஸீஹோ, இஸ்ராயீலின் மக்களே! என்னுடைய இரட்சகனும் உங்களுடைய இரட்சகனுமாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள் என்றே கூறினார். நிச்சயமாக எவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றாரோ அவர் மீது திட்டமாக அல்லாஹ் சுவனபதியைத் தடுத்துவிடுகிறான். மேலும் அவர் தங்குமிடம் நரகம் தான். இன்னும் (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் இல்லை.''*** (அல் மாயிதா : 72)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ""யார் எந்த வித இணைகளும் வைக்காதவர்களாக அல்லாஹ்வை சந்திக்கிறார்களோ அவர்கள் சுவனம் நுழைவார்கள். யார் இணை வைத்தவர்களாக அவனை சந்திக்கிறார்களோ அவர்கள் நரகம் செல்வார்கள்"". (அறிவிப்பவார் : ஜாபிர் (ரலி). ஆதாரம் முஸ்லிம் 93)

மேலும் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ""அல்லாஹ்வை நாடி யார் லாஇலாஹா இல்லல்லாஹ் என்று சொல்கிறாரோ அவர் மீது அல்லாஹ் நரகத்தை ஹராமாக்குகிறான்"". (அறிவிப்பவர் : மஹ்மூத் பின் ரபீ∴ (ரலி). ஆதாரம் : புகாரி 425 முஸ்லிம் 263)

**2-நல்ல செயல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு தௌஹீத் ஒரு நிபந்தனையாகும். இணை வைத்தல் அவற்றை பாழாக்கி விடும்.**

இறைவன் கூறுகிறான் :

﴿وَلَقَدْ أُوحِىَ إِلَيْكَ وَإِلَى ٱلَّذِينَ مِن قَبْلِكَ لَئِنْ أَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ وَلَتَكُونَنَّ مِنَ ٱلْخَـٰسِرِينَ﴾ الزمر: ٦٥

***(நபியே) நீர் இணைவைத்தால் நிச்சயமாக உம்முடைய செயல்கள் யாவும் அழிந்து விடும். நிச்சயமாக நீர் நஷ்டமடைபவர்களிலும் ஆகிவிடுவீர் என உமக்கும் உமக்கு முன்னிருந்தவர்களுக்கும் (வஹி) அறிவிக்கப்பட்டது.''*** (அல் ஜுமர் : 65)

மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿فَمَن كَانَ يَرْجُوا۟ لِقَآءَ رَبِّهِۦ فَلْيَعْمَلْ عَمَلًا صَـٰلِحًا وَلَا يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِۦٓ أَحَدًۢا﴾ الكهف: ١١٠

***யார் தன் இரட்சகனைச் சந்திக்க ஆதரவு வைக்கிறாரோ அவர் நற்கருமங்களைச் செய்யட்டும். தன் இரட்சகனின் வணக்கத்தில் அவர் எவரையும் இணையாக்க வேண்டாம்."*** (அல்கஹ்ப் : 110)

மேலும் இமாம் அபூஅப்தில்லாஹ் அல் தஸ்தரி கூறுகிறார்கள்: ஈமான் என்றால் மொழிதல், செயல், தூய எண்ணம், நபி வழி ஆகியவையாகும். எனவே செயல் இல்லாமல் மொழிதல் மாத்திரம் இருந்தால் அது நிராகரிப்பாகும். தூய எண்ணம் இல்லாமல் சொல்லும் செயலும் இருந்தால் அது நயவஞ்சகமாகும். இன்னும் நபியின் வழிகாட்டி இல்லாமல் சொல்லும், செயலும் தூய எண்ணமும் இருந்தால் அது (பித்அத்) வழிகேடாகும்.

**3-தௌஹீத் தவறுகளை நீக்கி கெட்டவைகளைப் போக்கும்.**
அல்லாஹுதஆலா ஹதீஸில் குத்ஸியில் கூறுகிறான்: ""ஏ ஆதமின் மகனே, நீ பூமியளவு தவறுகள் செய்து விட்டு இணை வைக்காத நிலையில் என்னை நெருங்கினால் பூமியளவு மன்னிக்கும் தன்மையுடன் நான் உன்னை நெருங்குவேன்" என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி). ஆதாரம் : திர்மிதீ 3540)

## தௌஹீத் ருபூபிய்யா
## படைத்துப் பரிபாலிப்பதில் இறைவனை ஒருமைப்படுத்துதல்

தௌஹீத் ருபூபிய்யா என்பது: அல்லாஹ் அடியார்களைப் படைத்து அவர்களுக்கு உணவளிப்பவன், அவர்களை உயிர்ப்பித்து மரணிக்கவும் செய்பவன் என நம்பிக்கை கொள்வதாகும். அல்லது அல்லாஹ்வின் செயல்களில் அவனை ஒருமைப்படுத்துவதாகும். உதாரணம் அவனே படைப்பவன், உணவளிப்பவன்.

இந்த தவ்ஹீதை இணைவைப்பாளர்களும் யூதர்களும், கிறிஸ்தவர்களும், நட்சத்திரத்தை வணங்கக்கூடியவர்களும், நெருப்பு வணங்கிகளும் ஏற்றுக் கொண்டனர். தற்போதுள்ள பகுத்தறிவு வாதிகள் மாத்திரமே இதனை ஏற்க மறுக்கின்றனர்.

**தௌஹீத் ருபூபிய்யாவிற்கான ஆதாரங்கள்.**
இறைவனை மறுக்கக் கூடிய இம் மடையர்களுக்கு நாம் கூறுவது யாதெனில்: உருவாக்கியவன் இல்லாமல் எந்த அடிச்சுவடும் உருவாகும் என்றோ, செய்தவன் இல்லாமல் எந்தச் செயலும் நடைபெறும் என்றோ, படைத்தவன் இல்லாமல் எந்தப் படைப்பும் உருவாகிவிடும் என்றோ அறிவுடைய எவரும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். கருத்து வேறுபாடில்லா விஷயம் என்னவென்றால் சாதாரண ஓர் ஊசியை உற்று நோக்கினாலே அதைச் செய்தவன் ஒருவன் இருக்கிறான் என்பது தெளிவாகின்றது. அப்படியானால் மனித அறிவையே திகைக்கச் செய்யக்கூடிய இப்பிரம்மாண்டமான உலகம், அதை உருவாக்கியவன் இல்லாமல் உருவாகியிருக்க முடியுமா? திட்டமிட்டவன் இல்லாமல் திட்டமிட்டு இயங்க முடியுமா? அதிலே இருக்கின்ற நட்சத்திரங்கள், முகில் கூட்டங்கள், இடி, மின்னல், பாலைவனங்கள், கடல்கள், இருள், ஒளி, மரங்கள், பூக்கள், மனிதர்கள், ஜின்கள், விலங்குகள் இன்னும் இது போன்ற எண்ணிலடங்காதவைகள் அனைத்தும் உருவாக்கியவன் இல்லாமல் உருவாகியிருக்க முடியுமா? சிறிதளவு அறிவு இருக்கக்கூடியவன் கூட, சிறிதளவு விளக்கம் இருக்கக்கூடியவன் கூட இவ்வாறு கூற மாட்டான். மொத்தத்தில் அல்லாஹ்தான் படைத்துப் பரிபாலிப்பவன்.

இறைவன் கூறுகிறான் :

﴿أَمۡ خُلِقُواْ مِنۡ غَيۡرِ شَيۡءٍ أَمۡ هُمُ ٱلۡخَٰلِقُونَ﴾ ال طور: ٣٥

***இறைவன் கூறுகிறான்: "படைப்பாளன் யாருமின்றி இவர்கள் பிறந்து விட்டார்களா? அல்லது இவர்கள் தங்களுக்குத் தாங்களே படைப்பாளர்களாய் இருக்கின்றார்களா"?*** (அத்தூர்:35)

மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿ ٱللَّهُ خَٰلِقُ كُلِّ شَيْءٍ ۖ وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ وَكِيلٌ ﴾ الزمر: ٦٢

***அல்லாஹ்வே ஒவ்வொரு பொருளையும் படைக்கிறவன் அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் பொறுப்பாளனுமாவான்."*** (அல் ஜுமர்:62)

இதற்கு அறிவுப்பூர்வமான ஓர் ஆதாரம் என்னவென்றால் இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுவதாவது, தர்க்கக் கலை உடையவர்களில் ஒரு கூட்டம் இறைவன் இருக்கிறானா, இல்லையா என்று விவாதம் புரிய விரும்பினார்கள். அப்போது அபூஹனீபா (ரஹ்) அவர்கள், இந்த விஷயத்தைப் பற்றி நாம் பேசுவதற்கு முன்னால் நதியில் செல்லக்கூடிய ஒரு கப்பலைப் பற்றி எனக்குக் கூறுங்கள். அதாவது அக்கப்பல் தானாகச் சென்று உணவுப் பொருட்கள், சரக்குகள் இன்னும் இது போன்ற பொருட்களை தானாகவே ஏற்றிக் கொண்டு, தானாக திரும்பிச் சென்றுவிடுகிறது. பிறகு தானாகவே நங்கூரமிட்டு அனைத்துப் பொருட்களையும் தானாகவே இறக்கி வைத்து விட்டு தானாகவே திரும்பி வந்து விடுகிறது. இவ்வனைத்தும் வழிநடத்துவதற்கு யாரும் இல்லாமலேயே நடந்திருக்கிறது என்றால் இது எப்படி முடியும்? அதற்கு அவர்கள் இது சாத்தியமாகாது என்று கூறினார்கள். அதற்கு அபூஹனீபா (ரஹ்) அவர்கள் இது சாத்தியமாகாது என்று சொன்னால் இவ்வுலகம் எப்படி ஒரு வழிநடத்துபவன் இல்லாமல் இருக்க முடியும்? என்று கேட்டார்கள். இந்தச் செய்தி அபூஹனீபா (ரஹ்) அவர்கள் தவிர மற்றவர்களிடமிருந்தும் அறிவிக்கப்படுகிறது. (தப்ஸீர் இப்னு கஸீர் பாகம் 1 பக் 197)

**நிராகரிப்பாளர்கள் தௌஹீத் ருபூபிய்யாவை ஏற்றார்கள் என்பதற்கான ஆதாரங்கள்**

இறைவன் கூறுகிறான் :

﴿ وَلَئِن سَأَلْتَهُم مَّنْ خَلَقَ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضَ لَيَقُولُنَّ ٱللَّهُ ۚ قُلِ ٱلْحَمْدُ لِلَّهِ ۚ بَلْ أَكْثَرُهُمْ لَا يَعْلَمُونَ ﴾ لقمان: ٢٥

***மேலும் வானங்களையும் பூமியையும் சிருஷ்டித்தவன் யார் ? என்று (நபியே), நீர் அவர்களை கேட்பீராயின், அதற்கவர்கள் அல்லாஹ் என்று நிச்சயமாக கூறுவார்கள். அல்ஹம்துலில்லாஹ் எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே என்று நீர் கூறுவீராக எனினும் அவர்களில் பெரும்பாலோர் அறியமாட்டார்கள்."*** (லுக்மான்:25)

மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿ قُلْ مَن يَرْزُقُكُم مِّنَ ٱلسَّمَآءِ وَٱلْأَرْضِ أَمَّن يَمْلِكُ ٱلسَّمْعَ وَٱلْأَبْصَٰرَ وَمَن يُخْرِجُ ٱلْحَيَّ مِنَ ٱلْمَيِّتِ وَيُخْرِجُ ٱلْمَيِّتَ مِنَ ٱلْحَيِّ وَمَن يُدَبِّرُ ٱلْأَمْرَ ۚ فَسَيَقُولُونَ ٱللَّهُ ۚ فَقُلْ أَفَلَا تَتَّقُونَ ﴿٣١﴾ فَذَٰلِكُمُ ٱللَّهُ رَبُّكُمُ ٱلْحَقُّ ۖ فَمَاذَا بَعْدَ ٱلْحَقِّ إِلَّا ٱلضَّلَٰلُ ۖ فَأَنَّىٰ تُصْرَفُونَ ﴾ يونس: ٣١ - ٣٢

***வானத்திலிருந்தும், பூமியில் இருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? அல்லது உங்களிடமுள்ள கேட்கும் மற்றும் பார்க்கும் ஆற்றல் யாருடைய அதிகாரத்தில் உள்ளன? இறந்ததிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துபவனும் உயிருள்ளதிலிருந்து இறந்ததை வெளிப்படுத்துபவனும் யார்? (அகிலத்தாரின்) சகல காரியங்களைத் திட்டமிட்டு நிகழ்த்துபவன் யார்? என (நபியே) நீர் அவர்களிடம் கேட்பீராக. அதற்கவர்கள் அல்லாஹ் தான் என்று கூறுவார்கள். அவ்வாறாயின், (அவனுக்கு) நீங்கள் பயப்படமாட்டீர்களா? என்று நீர் கூறுவீராக.***

***(இத்தகைய தகுதிக்குரிய) அவன் தான் உங்களுடைய உண்மையான இரட்சகனாகிய அல்லாஹ், இந்த உண்மைக்கு பின்னர், வழிகேட்டைத் தவிர வேறு (எஞ்சியிருப்பது) யாது? (இவ்வுண்மையை விட்டு) நீங்கள் எங்கு திருப்பப்படுகிறீர்கள்? (என்றும் நபியே நீர் கேட்பீராக.)"*** (யூனுஸ்:31-32)

மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿وَلَئِن سَأَلۡتَهُم مَّنۡ خَلَقَ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضَ لَيَقُولُنَّ خَلَقَهُنَّ ٱلۡعَزِيزُ ٱلۡعَلِيمُ﴾ ال زخرف: ٩

***(நபியே) அவர்களிடம் வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்? என்று நீர் கேட்டால், (யாவற்றையும்) மிகைத்தவன் நன்கறிகிறவன் ஆகிய அல்லாஹ் தான் அவற்றைப் படைத்தான் என்று நிச்சயமாக அவர்கள் கூறுவார்கள்."*** (அல்ஜுஃக்ரூப்: 9)

**குறிப்பு** : தௌஹீத் ருபூபிய்யா மாத்திரம் ஒருவனை இஸ்லாத்தில் நுழைய வைக்காது. அதனுடன் தௌஹீத் உலூஹிய்யாவையும் அவன் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இந்த வகைத் தௌஹீதை ஏற்றுக் கொண்டு வாழ்ந்த குரைஷிகளுடன் நபி (ஸல்) அவர்கள் பல முறை போரிட்டுள்ளார்கள்.

## தௌஹீத் உலூஹிய்யா

இதற்கு தவ்ஹீதுல் இபாதா என்றும் சொல்லப்படும். இது வணக்கத்தில் இறைவனை ஒருமைப்படுத்துவதாகும். ஏனெனில் அவன்தான் வணங்கப்படுவதற்குத் தகுதியானவன். இதற்கு அவனைத் தவிர வேறு எவரும் இல்லை. அவ்வாறு வணங்கப்படுவருடைய அந்தஸ்து உயர்ந்தாலும் அவருடைய மதிப்பு கூடினாலும் சரியே!

இந்தத் தௌஹீதைத்தான் தூதர்கள் தத்தமது சமூகத்தினருக்கு எடுத்துச் சொன்னார்கள். அத்தோடு அவர்கள் சமூகத்தினர் ஏற்றுக் கொண்ட தவ்ஹீத் ருபூபிய்யாவை உறுதிப்படுத்தவும் வந்தார்கள். அத்தூதர்கள் அம்மக்களை தவ்ஹீத் உலூஹிய்யாவின் பக்கம் அழைத்தார்கள். இது பற்றி அல்லாஹ் தனது திருமறையில் கூறுகிறான். நபி நூஹ் (அலை) அவர்களைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடும் போது பின் வருமாறு குறிப்பிடுகிறான் :

﴿وَلَقَدۡ أَرۡسَلۡنَا نُوحًا إِلَىٰ قَوۡمِهِۦٓ إِنِّي لَكُمۡ نَذِيرٞ مُّبِينٌ ٢٥ أَن لَّا تَعۡبُدُوٓاْ إِلَّا ٱللَّهَۖ إِنِّيٓ أَخَافُ عَلَيۡكُمۡ عَذَابَ يَوۡمٍ أَلِيمٖ﴾ هود: ٢٥ - ٢٦

***மேலும் நிச்சயமாக நாம் நூஹை அவருடைய சமூகத்தாரிடம் அனுப்பி வைத்தோம். நிச்சயமாக நான் உங்களுக்குப் பகிரங்கமாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றவன். அல்லாஹ்வைத் தவிர (மற்றெதையும்) நீங்கள் வணங்காதீர்கள். துன்புறுத்தும் நாளின் வேதனையைப் பற்றி நிச்சயமாக உங்களின் மீது பயப்படுகிறேன். (என்று கூறினார்)"*** (ஹூத் : 25, 26)

நபி மூஸா (அலை) அவர்கள் பிர்அவ்னுடன் விவாதித்ததைப் பற்றி குறிப்பிடும் போது இவ்வாறு கூறுகிறான்:

﴿قَالَ فِرۡعَوۡنُ وَمَا رَبُّ ٱلۡعَٰلَمِينَ ٢٣ قَالَ رَبُّ ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِ وَمَا بَيۡنَهُمَآۖ إِن كُنتُم مُّوقِنِينَ﴾ الشعراء: ٢٣ - ٢٤

"***மூஸாவைப் பார்த்து பிர்அவ்ன் அகிலத்தாரின் இரட்சகன் என்றால் என்ன? என்று கேட்டான். அதற்கு நீங்கள் உறுதி கொண்டவர்களாக இருப்பின் வானங்கள் மற்றும் பூமி இன்னும் அவை இரண்டிற்கும் மத்தியிலுள்ளவை ஆகியவற்றின் இரட்சகன் தான் (அகிலத்தாரின் இறைவன் ஆவான்) என்று (மூஸா) கூறினார்."***(அஷ்ஷுஃஅரா : 23,24)

நபி ஈஸா (அலை) அவர்களைப் பற்றி குறிப்பிடும் போது:

﴿إِنَّ ٱللَّهَ رَبِّى وَرَبُّكُمْ فَٱعْبُدُوهُ ۗ هَٰذَا صِرَٰطٌ مُّسْتَقِيمٌ﴾ آل عمران: ٥١

***நிச்சயமாக அல்லாஹ் தான் என் இரட்சகனும், உங்கள் இரட்சகனும் ஆவான், ஆகவே அவனையே நீங்கள் வணங்குங்கள். இதுதான் நேரான வழி (என்றும் கூறினார்).***" (ஆல இம்ரான் : 51) என்று கூறுகின்றான்.

அல்லாஹ் அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை நோக்கி வேதம் கொடுக்கப்பட்டவர்களுக்கு பின்வருமாறு கூறும்படி கட்டளையிட்டான் :

﴿قُلْ يَٰٓأَهْلَ ٱلْكِتَٰبِ تَعَالَوْا۟ إِلَىٰ كَلِمَةٍ سَوَآءٍۭ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَلَّا نَعْبُدَ إِلَّا ٱللَّهَ وَلَا نُشْرِكَ بِهِۦ شَيْـًٔا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا مِّن دُونِ ٱللَّهِ ۚ فَإِن تَوَلَّوْا۟ فَقُولُوا۟ ٱشْهَدُوا۟ بِأَنَّا مُسْلِمُونَ﴾ آل عمران: ٦٤

***(நபியே! அவர்களிடம்) ""வேதத்தையுடையோரே! நமக்கும் உங்களுக்குமிடையே (இசைவான) ஒரு பொது விஷயத்தின் பக்கம் வாருங்கள் (அதாவது) நாம் அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் வணங்க மாட்டோம். அவனுக்கு எவரையும் இணைவைக்க மாட்டோம் அல்லாஹ்வை விட்டு நம்மில் சிலர் சிலரைக் கடவுளர்களாக எடுத்துக் கொள்ள மாட்டோம்"" எனக் கூறும் (மு.'.மின்களே! இதன் பிறகும்) அவர்கள் புறக்கணித்து விட்டால் ""நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்!"" என்று நீங்கள் கூறிவிடுங்கள்.*** (ஆல இம்ரான் : 64)

எல்லா மனிதர்களையும் அழைத்து அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَيُّهَا ٱلنَّاسُ ٱعْبُدُوا۟ رَبَّكُمُ ٱلَّذِى خَلَقَكُمْ وَٱلَّذِينَ مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ﴾ البقرة: ٢١

***மனிதர்களே! உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தோர்களையும் படைத்த உங்களுடைய இரட்சகனை நீங்கள் வணங்குங்கள், (அதனால்) நீங்கள் பயபக்தியுடையோராகலாம்.''*** (அல்பகரா:21).

மொத்தத்தில் எல்லா இறைத்தூதர்களும் தவ்ஹீத் உலூஹிய்யாவுக்காகவும் வணக்க வழிபாடுகளை அல்லாஹ் ஒருவனுக்கு மாத்திரமே செய்ய வேண்டும், சிலை வணக்கம் மற்றும் அல்லாஹ் அல்லாதவர்களை வணங்குவதை விட்டும் தவிர்ந்து கொள்ள வேண்டும் என்பதன் பக்கம் தம் மக்களை அழைப்பதற்காகவுமே அனுப்பப்பட்டார்கள். அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

﴿وَلَقَدْ بَعَثْنَا فِى كُلِّ أُمَّةٍ رَّسُولًا أَنِ ٱعْبُدُوا۟ ٱللَّهَ وَٱجْتَنِبُوا۟ ٱلطَّٰغُوتَ﴾ النحل: ٣٦

***ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம். (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள். (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்திலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். (என்று கூறினார்கள்).*** (அந்நஹ்ல்:36)

அனைத்து தூதர்களும் தம் சமூகத்தினரை அழைத்ததை செவியுறுவோமெனில் தம் சமூகத்தினரின் செவிகளை தட்டக் கூடிய முதல் அழைப்பாக இருப்பது, **என் சமூகத்தினரே! நீங்கள் அல்லாஹ்வையே வணங்குங்கள் அவனையன்றி வேறு இறைவன் உங்களுக்கு இல்லை** என்றே இருக்கும்.

# வணக்கம் என்பதின் விளக்கம்

அகராதியில் இபாதத் என்றால் பணிதல், வழிப்படுதல் என்பதாகும். சன்மார்க்கப்படி இபாதத் என்றால், தூதர்கள் வாயிலாக அல்லாஹ் ஏவியவைகளை ஏற்று நடப்பதன் மூலமாக அல்லாஹ்வை வழிப்படுதல் என்பதாக இமாம் இப்னு தைமியா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

மேலும் அவர்கள் கூறினார்கள், இபாதத் என்பது அல்லாஹ் விரும்பக் கூடிய அவன் பொருந்திக் கொள்ளக் கூடிய வெளிப்படையான அந்தரங்கமான சொல், செயல்களாகும். எனவே அனைத்து வகையான வணக்க வழிபாடுகளிலும் அல்லாஹ் ஒருவனை மாத்திரம் ஒருமைப்படுத்தி அவனுக்காக வேண்டி மனதைத் தூய்மைப் படுத்தி இபாதத்தை நபி (ஸல்) அவர்களின் சொல் செயல் அடிப்படையில் செயல்படுத்துவதே ஒரு முஸ்லிமின் கடமையாகும். அல்லாஹ் வெறுக்கக் கூடிய வெளிப்படையான அந்தரங்கமான சொல், செயல்கள் அனைத்தையும் தவிர்ந்து கொள்வதும் வணக்கத்திலுள்ளதென்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

**இபாதத் உள்ளடக்கும் வகைகள் பின்வருமாறு:**

இபாதத் என்பது தொழுகை, தவாப், ஹஜ், நோன்பு, நேர்ச்சை, பள்ளியில் (இ.ஃ.திகாப்) தங்கியிருத்தல், அறுத்துப் பலியிடுதல், (சுஜூது) சிரம்பணிதல், ருகூ.ஃ. செய்தல், உள்ளச்சம், ஆவல் கொள்வது, பயம், (தவக்குல்) நம்பிக்கை, இரட்சிப்புத் தேடுவது, ஆதரவு வைப்பது மற்றும் அல்லாஹ் திருமறைக் குர்ஆனிலும் நபி (ஸல்) அவர்கள், ஆதாரப் பூர்வமான ஹதீஸ்களிலும் காட்டிய பல்வேறு வணக்கங்களையும் உள்ளடக்கியிருக்கின்றது. எவர் இவைகளில் ஏதாவதொரு வணக்கத்தை அல்லாஹ் அல்லாதவைகளுக்கு நிறைவேற்றுகின்றாரோ அவர் இறைவாக்கின் படி(முஷ்ரிக்) இணை கற்பித்தவராகி விடுவார். இதைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடும் போது பின்வருமாறு கூறுகிறான் :

﴿وَمَن يَدْعُ مَعَ ٱللَّهِ إِلَٰهًا ءَاخَرَ لَا بُرْهَٰنَ لَهُۥ بِهِۦ فَإِنَّمَا حِسَابُهُۥ عِندَ رَبِّهِۦٓ ۚ إِنَّهُۥ لَا يُفْلِحُ ٱلْكَٰفِرُونَ﴾ المؤمنون: ١١٧

***எவன் அல்லாஹ்வுடன் வணக்கத்திற்குரிய வேறு இறைவனை அழைக்கிறானோ அவனிடம் அதுபற்றி யாதொரு சான்றும் இல்லை. அவனுடைய கணக்கு அவனுடைய இறைவனிடமே உண்டு. நிச்சயமாக நிராகரிக்கக்கூடியவர்கள் வெற்றி பெற மாட்டார்கள்."*** (அல் மு.ஃ.மினூன்:117)

மேலும் இறைவன் கூறுகிறான்:

﴿وَأَنَّ ٱلْمَسَٰجِدَ لِلَّهِ فَلَا تَدْعُوا۟ مَعَ ٱللَّهِ أَحَدًا﴾ الجن: ١٨

***நிச்சயமாக மஸ்ஜிதுகள் அல்லாஹ்வுக்கு உரியனவாகும். ஆகவே (அவைகளில்) அல்லாஹ்வுடன் மற்றெவரையும் நீங்கள் பிரார்த்தித்து அழைக்க வேண்டாம்."*** (அல்ஜின்:18)

இந்த வசனத்தில் (மற்றெவரையும்) என்பது அனைத்து படைப்பினங்களையும் உள்ளடக்கும். இறைத்தூதர் அல்லது மலக்கு அல்லது நல்லடியார் யாராக இருந்தாலும் சரியே!

# இணைவைத்தலின் ஆரம்ப நிலை

இணைவைத்தலின் ஆரம்பம் நபி நூஹ் (அலை) அவர்களின் சமூகத்திலே தான் ஆரம்பமானது. அல்லாஹ் நபி நூஹ் (அலை) அவர்களை, அல்லாஹ் ஒருவனை மாத்திரமே வணங்குவதற்கும், அவர்கள் வணங்கிக் கொண்டிருந்த விக்கிரக வழிபாடுகளை விட்டுவிடுமாறு அழைப்பதற்கும் தூதராக அனுப்பிய போது, வேண்டுமென்றே மறுத்து அவர்கள் செய்து வந்த

காரியங்களில் தொடர்ந்து இருந்து வந்தார்கள். மேலும் நபி நூஹ் (அலை) அவர்களை மறுப்பதன் மூலமும் முன்னோக்கினார்கள். அவர்கள் சொன்னதை குர்ஆன் பின்வருமாறு குறிப்பிடுகிறது:

﴿وَقَالُوا۟ لَا تَذَرُنَّ ءَالِهَتَكُمْ وَلَا تَذَرُنَّ وَدًّا وَلَا سُوَاعًا وَلَا يَغُوثَ وَيَعُوقَ وَنَسْرًا﴾ نوح: ٢٣

***மேலும் அவர்கள் (தம் சமூகத்தாரிடம்) உங்களுடைய (வணக்கத்திற்குரிய) தெய்வங்களை நிச்சயமாக நீங்கள் விட்டு விடாதீர்கள். வத்து, சுவாஉ, யகூஸ், யஊக், நஸ்ர் ஆகிய விக்கிரகங்களையும் நிச்சயமாக நீங்கள் விட்டு விடாதீர்கள் என்றும் கூறினார்கள்.*** (நூஹ்:23)

இவ்வசனத்தைப் பற்றி **இப்னு அப்பாஸ் (ரலி)** அவர்கள் கூறிய விடயம் புகாரியில் பின் வருமாறு இடம் பெற்றுள்ளது. அப்பெயர்கள் நபி நூஹ் (அலை) அவர்களுடைய சமூகத்தில் வாழ்ந்த சாலிஹான நல்லடியார்கள். அவர்கள் இறந்த பின் ஷைத்தான் அம்மக்களிடம் தோன்றி அந்நல்லடியார்கள் அமர்ந்திருந்த அமர்விடங்களில் அவர்களுடைய சிலைகளை நாட்டுமாறும் அவர்களுடைய படங்களை மாட்டி வைக்குமாறும் அதற்கு அவர்களின் பெயர்களை பெயரிடுமாறும் கூறினான். அம்மக்களும் அதன்படி செய்து வைத்தார்கள். எனினும் அம்மக்கள் அதனை வணங்கவில்லை, ஆனால் அவர்கள் மரணித்த பின் அவர்களுக்குப் பின் வந்த சமுதாயம் அவர்களை வணங்க ஆரம்பித்தார்கள். (புகாரி 4920)

**ஹாபில் பின் கையூம்** அவர்களும், அதிகமான சலபுஸ்ஸாலிஹீன்களும் கூறியதாவது : அந்த நல்லடியார்கள் மரணித்த போது அவர்களின் கப்ருகளின் முன் ஆராதனை புரிந்து கொண்டிருந்தார்கள். பின் அதிக காலம் கழிந்த பின், பின்னர் வந்தவர்கள் அச்சிலைகளை வணங்கினார்கள்.

**ஷிர்க் ஏற்படக் காரணம் நல்லடியார்கள் விடயத்தில் வரம்பு மீறுவதே**

இங்கு நாம் அறிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் ஆதமுடைய சந்ததியினரிடையே (ஷிர்க்) இணைவைத்தல் ஏற்பட்டதற்கான காரணம் நல்லடியார்கள் விடயத்தில் வரம்பு மீறியதே !

வரம்பு மீறுவது என்றால் சொல்லிலும் நம்பிக்கையிலும் கண்ணியப்படுத்துவதிலும் அளவுக்கதிகமாக செல்வதாகும். இதனால் தான் அல்லாஹ் கூறுகிறான்:

﴿يَٰٓأَهْلَ ٱلْكِتَٰبِ لَا تَغْلُوا۟ فِى دِينِكُمْ وَلَا تَقُولُوا۟ عَلَى ٱللَّهِ إِلَّا ٱلْحَقَّ ۚ إِنَّمَا ٱلْمَسِيحُ عِيسَى ٱبْنُ مَرْيَمَ رَسُولُ ٱللَّهِ وَكَلِمَتُهُۥٓ أَلْقَىٰهَآ إِلَىٰ مَرْيَمَ وَرُوحٌ مِّنْهُ﴾ ال نساء: ١٧١

***வேதக்காரர்களே! உங்கள் மார்க்கத்தில் நீங்கள் அளவு கடந்து செல்லாதீர்கள். இன்னும் அல்லாஹ்வின் மீது உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள். நிச்சயமாக மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ் அல்லாஹ்வுடைய தூதரும் அவனுடைய வாக்கும் ஆவார். அல்லாஹ் மர்யமின் பால் அந்த வாக்கைப் போட்டான். (எனவே) அவரும் அவனிடமிருந்து வந்த ஓர் ஆன்மாதான்.*** (அந்நிஸா : 171)

**ஆயிஷா (ரலி)** அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் மரண தருவாயில் இருக்கும் போது தம்முடைய போர்வையை தம் முகத்தின் மீது போடலானார்கள். அது முகத்தை மறைத்த போது அதனை நீக்கி விட்டு பின் வருமாறு சொன்னார்கள்:

""யூத கிறிஸ்த்தவர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக, அவர்கள் தங்கள் நபிமார்களுடைய அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கிக் கொண்டார்கள்"". அவர்கள் செய்ததை தம் சமுதாயத்தினருக்கு நபி (ஸல்) அவர்கள் எச்சரித்தார்கள். அவர்கள் அப்படி செய்திராவிட்டால் நபி (ஸல்) அவர்களுடைய அடக்கஸ்தலத்தையும் அவ்வாறு

செய்திருப்பார்கள். ஆனாலும் அவர்கள் அது வணக்கஸ்தலமாக ஆக்கப்படுவதை பயந்துள்ளார்கள். (புகாரி 435, 4441 முஸ்லிம் 529, 531)

எனினும் பின்னால் வந்தவர்கள் ஏராளமான பாடல்கள், கவிதைகள் மூலம் நல்லடியார்கள் விடயத்தில் வரம்பு மீறினார்கள். அல்லாஹ்விடம் மாத்திரம் உதவி தேடவேண்டிய விடயங்களில் நபி (ஸல்) அவர்களிடமும் ஏனைய நல்லடியார்களிடமும் உதவி தேடுமளவுக்கு எல்லை கடந்து சென்றார்கள். மேலும் மறைவான விடயங்களை அறிவதை நபி (ஸல்) அவர்களுடன் இணைத்துக் கூறலானார்கள். எந்தளவுக்கு என்றால் நபி (ஸல்) அவர்கள் நடந்த இனி நடக்கவிருக்கின்ற அனைத்து விடயங்களையும் அறியாமல் இவ்வுலகத்தை விட்டும் பிரிந்து செல்லவில்லை என்று வரம்பு மீறக்கூடிய சிலர் கூறினார்கள். தெளிவான குர்ஆனுக்கே இவர்கள் மாற்றம் செய்தார்கள்.

﴿وَعِندَهُۥ مَفَاتِحُ ٱلۡغَيۡبِ لَا يَعۡلَمُهَآ إِلَّا هُوَ﴾ الأنعام: ٥٩

***அவனிடமே மறைவானவற்றின் சாவிகள் இருக்கின்றன. அவற்றை அவனையன்றி வேறெருவரும் அறியமாட்டார்.”*** (அல் அன்ஆம் :59)

மேலும் இறைவன் கூறுகிறான்:

﴿إِنَّ ٱللَّهَ عِندَهُۥ عِلۡمُ ٱلسَّاعَةِ وَيُنَزِّلُ ٱلۡغَيۡثَ وَيَعۡلَمُ مَا فِي ٱلۡأَرۡحَامِۖ وَمَا تَدۡرِي نَفۡسٞ مَّاذَا تَكۡسِبُ غَدٗاۖ وَمَا تَدۡرِي نَفۡسُۢ بِأَيِّ أَرۡضٖ تَمُوتُۚ إِنَّ ٱللَّهَ عَلِيمٌ خَبِيرُۢ﴾ لقمان: ٣٤

***நிச்சயமாக அல்லாஹ்விடமே மறுமை நாள் பற்றிய அறிவு இருக்கிறது. அவனே மழையையும் இறக்கி வைக்கிறான். அவனே கர்ப்பங்களில் உள்ளவற்றை அறிகிறான். எந்த ஆத்மாவும் நாளை எதைச் சம்பாதிக்கும் என அறியாது. மேலும் எந்தப் பூமியில் தனக்கு மரணம் ஏற்படும் என்பதை எந்த ஆத்மாவும் அறியாது நிச்சயமாக அல்லாஹ் நன்கறிகிறவன், நுட்பம் மிக்கவன்.”*** (லுக்மான்:34)

மேலும் நபி (ஸல்) அவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَوۡ كُنتُ أَعۡلَمُ ٱلۡغَيۡبَ لَٱسۡتَكۡثَرۡتُ مِنَ ٱلۡخَيۡرِ وَمَا مَسَّنِيَ ٱلسُّوٓءُ﴾ الأعراف: ١٨٨

***மறைவானவற்றை நான் அறிந்திருந்தால் நன்மைகளையே அதிகமாக தேடிக் கொண்டிருப்பேன் தீமை என்னைத் தொட்டிருக்காது.*** (அல் அஃராப் : 188)

மேலும் இறைவன் கூறுகிறான்:

﴿قُل لَّا يَعۡلَمُ مَن فِي ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِ ٱلۡغَيۡبَ إِلَّا ٱللَّهُ﴾ النمل: ٦٥

***நபியே கூறுவீராக, வானங்கள் மற்றும் பூமியில் உள்ள மறைவான விடயங்களை அல்லாஹ்வையன்றி வேறு எவரும் அறியமாட்டார்.*** (அந்நம்ல்:65)

# பெயர்கள் மற்றும் பண்புகளில் அல்லாஹ்வை ஏகத்துவப்படுத்தல்.

அல்லாஹ் தன் திருமறை மூலமும் தன் தூதர் (ஸல்) அவர்கள் வாயிலாகவும் தனக்கு உறுதிப்படுத்தியிருக்கின்ற பெயர்களையும் பண்புகளையும் மறுக்காமல், மாற்றாமல், உருவகப்படுத்தாமல், ஒப்பாக்காமல் அப்படியே உறுதிப்படுத்த வேண்டும்.

**அது பற்றிய வரைவிலக்கணங்கள் பின்வருமாறு:**

1-அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களும் அவனது உயர்ந்த பண்புகளும் பரிபூரணமானது. இறைவன் கூறுகிறான்:

﴿لِلَّذِينَ لَا يُؤْمِنُونَ بِالْآخِرَةِ مَثَلُ السَّوْءِ ۖ وَلِلَّهِ الْمَثَلُ الْأَعْلَىٰ ۚ وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ﴾ النحل: ٦٠

***எவர்கள் மறுமையின் மீது ஈமான் கொள்ளவில்லையோ அவர்களுக்கே கெட்ட தன்மை இருக்கிறது - அல்லாஹ்வுக்கு மிக உயர்ந்த தன்மை இருக்கிறது மேலும் அவன் மிகைத்தவன் ஞானம் மிக்கவன்.*** (அந்நஹ்ல்:60)

மேலும் அவன் கூறுகிறான்

﴿وَلِلَّهِ الْأَسْمَاءُ الْحُسْنَىٰ فَادْعُوهُ بِهَا ۖ وَذَرُوا الَّذِينَ يُلْحِدُونَ فِي أَسْمَائِهِ ۚ سَيُجْزَوْنَ مَا كَانُوا يَعْمَلُونَ﴾ الأعراف: ١٨٠

***அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்கள் இருக்கின்றன அவற்றைக் கொண்டே நீங்கள் அவனைப் பிரார்த்தியுங்கள், அவனுடைய திருநாமங்களை தவறாக பயன்படுத்துவோர்களை (புறக்கணித்து) விட்டு விடுங்கள் - அவர்களுடைய செயல்களுக்காக அவர்கள் (தக்க) கூலி கொடுக்கப்படுவார்கள்.*** (அல் அ.்.ராப்: 180)

2- அல்லாஹ்வின் பெயர்களும் பண்புகளும் ஆதாரத்தின் அடிப்படையில் அமைந்தவையாகும். குர்ஆன் ஹதீஸ் மட்டுமே அவற்றுக்கு ஆதாரம். அவை இவ்வளவுதான் என்று திட்டமாக இல்லை. இன்னும் சொல்லப்போனால் அவற்றில் சில மட்டுமே அறியப்பட்டுள்ளன.

இறைவன் கூறுகிறான்.

﴿قُلْ إِنَّمَا حَرَّمَ رَبِّيَ الْفَوَاحِشَ مَا ظَهَرَ مِنْهَا وَمَا بَطَنَ وَالْإِثْمَ وَالْبَغْيَ بِغَيْرِ الْحَقِّ وَأَنْ تُشْرِكُوا بِاللَّهِ مَا لَمْ يُنَزِّلْ بِهِ سُلْطَانًا وَأَنْ تَقُولُوا عَلَى اللَّهِ مَا لَا تَعْلَمُونَ﴾ الأعراف: ٣٣

***என்னுடைய இரட்சகன் (ஆகாதென்று) தடுத்திருப்பதெல்லாம் மானக் கேடான செயல்களை அவற்றில் வெளிப்படையானதையும் மறைமுகமானதையும் (இதர) பாவத்தையும் உரிமையின்றி வரம்பு மீறுதலையும் அல்லாஹ்விற்கு நீங்கள் இணைவைப்பதையும் அதற்கு எந்த வித ஆதாரத்தையும் அவன் இறக்கி வைக்காதிருக்க இன்னும் நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது (பொய்யாகக்) கூறுவதையும் தான் என்று (நபியே) நீர் கூறுவீராக.””*** (அல்அ.்.ராப்:33)

மீண்டும் இறைவன் கூறுகிறான்:

﴿وَلَا تَقْفُ مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ ۚ إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَٰئِكَ كَانَ عَنْهُ مَسْئُولًا﴾ الإسراء: ٣٦

***நபியே, எதைப்பற்றி உமக்குத் தீர்க்கமான அறிவில்லையோ அதை நீர் பின்பற்றாதீர் (ஏனெனில்) நிச்சயமாக செவி, பார்வை, இதயம் (ஆகிய) இவை ஒவ்வொன்றும் விசாரிக்கப்படக்கூடியதாக இருக்கிறது***. (அல் இஸ்ரா:33)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "இறைவா! நிச்சயமாக நான் உனது அடியான், உன்னுடைய அடிமையின் (ஆதமின்) மகன். உன்னுடைய அடிமையின் (ஹவ்வாவின்) மகன். என்னுடைய நெற்றிமுடி உன்னுடைய கையிலே இருக்கிறது. என்னிலே உன்னுடைய தீர்வே அமுல்படுத்தப்படுகிறது. என் விடயத்தில் உனது தீர்ப்பு நீதமானதே. ஆகவே உனக்கு நீயே சூட்டிக்கொண்ட அல்லது உனது வேதத்தில் இறக்கி வைத்த அல்லது உனது படைப்புகளில் எதற்காவது நீ அறிவித்துக் கொடுத்த அல்லது உனது மறைவான ஞானத்தில் நீ தக்க வைத்திருக்கும் ஒவ்வொரு பெயரைக் கொண்டும், குர்ஆனை எனது இதயத்திற்கு குளிர்ச்சியாகவும் எனது உள்ளத்திற்கு ஒளிமயமாகவும் என் கவலையை நீக்கக்கூடியதாகவும் என் இடரையும் பதட்டத்தையும் போக்கக்கூடியதாகவும் ஆக்குவாயாக! என்று கேட்கிறேன்". (அஹ்மத் 3712)

3-அல்லாஹ்வுடைய பெயரையோ, வர்ணனையையோ உதாரணம் காட்டி சொல்லக் கூடாது.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿لَيْسَ كَمِثْلِهِۦ شَىْءٌ ۖ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلْبَصِيرُ﴾ الشورى: ١١

***அவனைப் போன்று எப்பொருளும் இல்லை. அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன். பார்க்கிறவன்.*** (அஷ்ஷூரா: 11)

மேலும் இறைவன் கூறுகிறான்:

﴿فَلَا تَضْرِبُوا۟ لِلَّهِ ٱلْأَمْثَالَ ۚ إِنَّ ٱللَّهَ يَعْلَمُ وَأَنتُمْ لَا تَعْلَمُونَ﴾ النحل: ٧٤

***அல்லாஹ்வுக்கு நீங்கள் உதாரணங்களைக் கூறாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் (சகலவற்றையும்) அறிவான் நீங்களோ அறிய மாட்டீர்கள்.***(அந்நஹ்ல்:74)

அதே போன்று குர்ஆன் ஹதீஸில் வந்திருக்கும் அல்லாஹ்வினுடைய எந்தப் பெயரையோ அல்லது பண்பையோ மறுக்கக் கூடாது. ஏனெனில் இவ்வாறு செய்வது அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும் அவனுடைய பெயர்களையும் பண்புகளையும் ஒன்றுமில்லாமல் ஆக்குவதுமாகும். இது குர்ஆன் ஹதீஸில் கையாடல் செய்வதாக அல்லது அவற்றை பொய்யாக்குவதாக அமையும். அதுமட்டுமல்லாமல் அல்லாஹ்வை குறைத்து மதிப்பிடுவதாகவும் குறைபாடுள்ள மற்ற படைப்பினங்களோடு அவனை ஒப்பாக்குவதாகவும் அமையும்.

4-அல்லாஹ்வுடைய பெயர்கள் மற்றும் பண்புகளுடைய பொருள் அறியப்பட்டவையாகும்.

எனினும் அதன் யதார்த்த நிலை அறியப்படாதவையாகும். அதனை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியார்.

அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَلَا يُحِيطُونَ بِهِۦ عِلْمًا﴾ طه: ١١٠

***""அவர்கள் அவனைத் தங்கள் கல்வியால் தீர அறிந்து கொள்ள மாட்டார்கள்""*** (தாஹா:110)

5-இரண்டு பெயர்கள் ஒன்றாக இருப்பதால் அவ்விரண்டு பெயர்களுக்குரியவர்களும் ஒன்றாக இருக்க வேண்டும் என்பது அவசியமல்ல

எவ்வாறெனில் அல்லாஹ் அவனுடைய படைப்புகளின் சில பெயர்களை தனக்குப் பெயராக சூட்டியுள்ளான். அதே போல் அவனுடைய படைப்புகளின் சில பண்புகளை தனது பண்பாக வர்ணித்துள்ளான்.

உதாரணமாக: கேள்வி, பார்வை. எனினும் அவனுடைய கேள்வி படைப்புகளின் கேள்வியைப் போலன்று. அவனுடைய பார்வை படைப்புகளின் பார்வையைப் போலன்று.

## இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் காரியங்கள்

இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் மிக ஆபத்தான காரியங்கள் பத்து , அவை பின்வருமாறு :

1-இறைவணக்கங்களில் இறைவனுக்கு இணை கற்பித்தல்.

﴿إِنَّ ٱللَّهَ لَا يَغۡفِرُ أَن يُشۡرَكَ بِهِۦ وَيَغۡفِرُ مَا دُونَ ذَٰلِكَ لِمَن يَشَآءُ﴾ النساء: ١١٦

***நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். மேலும் இதல்லாத குற்றங்களை தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான்.*** (அன்னிஸா:116)

இன்னும் இறைவன் கூறுகிறான்:

﴿إِنَّهُۥ مَن يُشۡرِكۡ بِٱللَّهِ فَقَدۡ حَرَّمَ ٱللَّهُ عَلَيۡهِ ٱلۡجَنَّةَ وَمَأۡوَىٰهُ ٱلنَّارُۖ وَمَا لِلظَّٰلِمِينَ مِنۡ أَنصَارٖ﴾ المائدة: ٧٢

***நிச்சயமாக எவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றாரோ திட்டமாக அல்லாஹ் அவருக்கு சொர்க்கத்தை தடை செய்து விடுகிறான். மேலும் அவர் தங்குமிடம் நரகம் தான், (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் யாருமில்லை.*** (அல் மாயிதா:72)

அதுபோல இறந்தவர்களை அழைத்தல், அவர்களிடம் உதவி தேடுதல், அவர்களுக்காக நேர்ச்சைகளை செய்தல், அவர்களுக்காக அறுத்துப் பலியிடுதல் ஆகிய அனைத்தும் இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் இணைவைப்பில் அடங்கும்.

2- தனக்கும் இறைவனுக்கும் இடையில் இடைத்தரகர்களை ஏற்படுத்திக் கொண்டு யார் அவர்களை அழைக்கவும் அவர்களிடம் பரிந்துரை செய்யத்தேடவும் அவர்கள் மீது நம்பிக்கை வைக்கவும் செய்கிறாரோ - அனைத்து அறிஞர்களின் ஏகோபித்த முடிவின் பிரகாரம் அவரும் காபிராகிவிடுவார்.

3- இறைவனுக்கு இணைவைப்பவர்களை யார் காபிர் என்று கருதவில்லையோ அல்லது அவர்களின் நிராகரிப்பில் சந்தேகம் கொண்டால் அல்லது அவர்களுடைய கொள்கையை சரி கண்டால் அவரும் இறைவனை நிராகரித்து விட்டார்.

4- நபி (ஸல்) அவர்களின் வழி முறைகளை விடவும் மற்ற வழிமுறைகள் பரிபூரணமானவை என யாரேனும் நம்பினால் அல்லது நபி (ஸல்) அவர்களின் சட்டங்களை விடவும் ஏனைய சட்டங்கள் சிறந்தவை என நம்பினால் உதாரணமாக நபி (ஸல்) அவர்களின் சட்டங்களை விடவும் மற்ற தலைவர்களின் சட்டங்களுக்கு ஒருவன் முன்னுரிமை வழங்கினால் அவனும் காபிராகி விட்டான்.

5- நபி (ஸல்) அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தை யாரேனும் வெறுத்தால் அவன் அம்மார்க்கத்தின் படி செயல்பட்டாலும் அவனும் காபிராகிவிடுகிறான்.

﴿ذَٰلِكَ بِأَنَّهُمْ كَرِهُوا مَا أَنزَلَ اللَّهُ فَأَحْبَطَ أَعْمَالَهُمْ﴾ محمد: ٩

***இது (ஏனெனில்) அல்லாஹ் இறக்கி வைத்ததை நிச்சயமாக அவர்கள் வெறுத்து விட்டார்கள் என்ற காரணத்தினாலாகும். ஆதலால் அவர்களுடைய செயல்களையெல்லாம் அவன் அழித்து விட்டான்.*** (முஹம்மத்:9) இது நயவஞ்சகர்களுடைய நிலையைப் போன்றாகும்.

6- யாராவது நபி (ஸல்) அவர்களின் மார்க்கத்தில் ஏதாவது ஒன்றை பரிகாசம் செய்தால் அல்லது அம்மார்க்கம் தரும் கூலியையோ அல்லது தண்டனையையோ பரிகாசம் செய்தால் அவனும் இறைவனை நிராகரித்து விட்டான்.

﴿قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنتُمْ تَسْتَهْزِئُونَ ۝٦٥ لَا تَعْتَذِرُوا قَدْ كَفَرْتُم بَعْدَ إِيمَانِكُمْ﴾ التوبة: ٦٥ - ٦٦

***(நபியே) அவர்களிடம் நீர் கூறும்: அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் அவனுடைய வசனங்களையுமா நீங்கள் பரிகாசம் செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் தவறுகளை நீங்கள் நியாயப்படுத்த வேண்டாம் நீங்கள் இறைநம்பிக்கை கொண்ட பின் திண்ணமாக நிராகரித்து விட்டீர்கள்.*** (அத்தவ்பா:65-66)

7- சூனியம் செய்தல், மேலும் அதன் முலம் பிரியத்தை ஏற்படுத்துவதும், பிளவை உண்டு பண்ணுவதும் சாத்தியமானது. யார் இதைச்செய்கிறாரோ அல்லது இதில் திருப்தியடைகிறாரோ அவரும் காபிராகி விட்டார்.

ஆதாரம் பின்வரும் இறை வசனமாகும் :

﴿وَمَا كَفَرَ سُلَيْمَانُ وَلَٰكِنَّ الشَّيَاطِينَ كَفَرُوا يُعَلِّمُونَ النَّاسَ السِّحْرَ وَمَا أُنزِلَ عَلَى الْمَلَكَيْنِ بِبَابِلَ هَارُوتَ وَمَارُوتَ ۚ وَمَا
يُعَلِّمَانِ مِنْ أَحَدٍ حَتَّىٰ يَقُولَا إِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا تَكْفُرْ﴾ البقرة: ١٠٢

***ஆனால் ஸுலைமான் ஒருபோதும் நிராகரித்தவர் அல்லர். ஷைத்தான்கள் தாம் நிராகரிப்பவர்கள். அவர்கள்தாம் மனிதர்களுக்குச் சூனியத்தைக் கற்றுக்கொடுத்தார்கள் இன்னும், பாபில் (பாபிலோன் என்னும் ஊரில்) ஹாருத், மாருத் என்ற இரண்டு மலக்குகளுக்கு இறக்கப்பட்டதையும் (தவறான வழியில் பிரயோகிக்கக் கற்றுக்கொடுத்தார்கள்). ஆனால் அவர்கள் (மலக்குகள்) இருவரும் ""நிச்சயமாக நாங்கள் சோதனையாக இருக்கிறோம் (இதைக் கற்று) நீங்கள் நிராகரிக்கும் கா.'.பிர்கள் ஆகிவிடாதீர்கள்"" என்று சொல்லி எச்சரிக்காத வரையில், எவருக்கும் இ(ந்த சூனியத்)தைக் கற்றுக் கொடுக்கவில்லை*** (அல்பகரா:102)

8- இணைவைப்பவர்களுக்கு உதவியாய் இருப்பதும் முஸ்லிம்களுக்கு எதிராக அவர்களுக்கு உதவிசெய்வதும் இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் செயலாகும். ஆதாரம் பின்வரும் வசனமாகும்.

﴿وَمَن يَتَوَلَّهُم مِّنكُمْ فَإِنَّهُ مِنْهُمْ ۗ إِنَّ اللَّهَ لَا يَهْدِي الْقَوْمَ الظَّالِمِينَ﴾ المائدة: ٥١

***உங்களில் எவரேனும் அவர்களை(த்தனக்கு)ப் பாது காவலாராக்கிக் கொண்டால் அப்போது நிச்சயமாக அவரும் அவர்களில் உள்ளவர் தாம் நிச்சயமாக அல்லாஹ் (இந்த) அநியாயக்கார சமூகத்தாருக்கு நேர்வழிகாட்ட மாட்டான்.''*** (அல்மாயிதா:51)

9-முஹம்மது நபி (ஸல்) அவர்களின் மார்க்கத்தை விட்டும் யாரும் வெளியேறிப் போய் விடலாம் அதற்கு அனுமதி உண்டு என யாரேனும் நம்பினால் அவனும் காபிராகிவிட்டான்.

﴿وَمَن يَبۡتَغِ غَيۡرَ ٱلۡإِسۡلَٰمِ دِينٗا فَلَن يُقۡبَلَ مِنۡهُ وَهُوَ فِي ٱلۡأٓخِرَةِ مِنَ ٱلۡخَٰسِرِينَ﴾ آل عمران: ٨٥

***இஸ்லாத்தை விடுத்து வேறொரு வாழ்க்கை நெறியை யாரேனும் மேற்கொள்ள விரும்பினால் அவனிடமிருந்து ஒருபோதும் அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது மேலும் மறுமையில் அவன் நஷ்டமடைந்தவரில் ஒருவனாக இருப்பான்."*** (ஆலஇம்ரான்:85)

10-அல்லாஹ்வின் மார்க்கத்தைப் படிக்காமலும் அதன் படி அமல் செய்யாமலும் அதனைப் புறக்கணிப்பது.

﴿وَمَنۡ أَظۡلَمُ مِمَّن ذُكِّرَ بِـَٔايَٰتِ رَبِّهِۦ ثُمَّ أَعۡرَضَ عَنۡهَآۚ إِنَّا مِنَ ٱلۡمُجۡرِمِينَ مُنتَقِمُونَ﴾ السجدة: ٢٢

***தன்னுடைய இறைவனின் வசனங்களைக் கொண்டு நினைவுபடுத்தப்பட்ட பின்னரும் அவற்றை புறக்கணித்து விடுகிறவனை விட மிக அநியாயக்காரன் யார்? நிச்சயமாக நாம் (இத்தகைய) குற்றவாளிகளை பழிவாங்கியே தீருவோம்.*** (அஸ்ஸஜ்தா:22)

இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றக்கூடிய இக்காரியங்கள் அனைத்தைப் பொருத்தும் வினையாகச் செய்பவன், விளையாட்டாகச் செய்பவன் என்று எந்த வித்தியாசமும் கிடையாது. எப்படிச்செய்தாலும் அவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிவிடுவான். ஆனால் நிர்பந்தத்திற்குள்ளானவனைத் தவிர, அவன் மீது குற்றமில்லை. ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

﴿مَن كَفَرَ بِٱللَّهِ مِنۢ بَعۡدِ إِيمَٰنِهِۦٓ إِلَّا مَنۡ أُكۡرِهَ وَقَلۡبُهُۥ مُطۡمَئِنُّۢ بِٱلۡإِيمَٰنِ﴾ النحل: ١٠٦

***எவரேனும் இறை நம்பிக்கை கொண்ட பிறகு நிர்ப்பந்தத்திற்குள்ளாகி அவருடைய உள்ளம் இறைவனை ஏற்றுக் கொள்வதில் நிம்மதியுடன் இருக்கும் நிலையில் நிராகரித்தாரானால் அவர் மீது குற்றமில்லை.*** (அந்நஹ்ல்:106)

எனவே இவை குறித்து எச்சரிக்கையாய் இருப்பதும் இவற்றிலிருந்து தன்னை தற்காத்துக் கொள்வதும் ஒரு முஸ்லிமுக்கு அவசியமாகும். இவ்வாறு வெளிரங்கத்தில் நம்பிக்கை கொள்ளக் கூடிய எத்தனை நயவஞ்சகர்கள் உள்ளனர். அவர்கள் தாம் இஸ்லாத்தில் வெளிப்படுத்தும் செயற்பாடுகளால் இவ்வுலகத் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டாலும் மறுமையில் அவர்கள் நரகின் கீழ்த்தளத்திலேயே இருப்பார்கள். மேலும் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாக்கும் காரியங்களை விட்டும் நோவினை மிக்க அவனுடைய தண்டனையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுவோமாக!

## எல்லாப் புகழும் ஏக இறைவனுக்கே!

بسم الله الرحمن الرحيم

# ஹதீஸ்

# 2

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம் அஹ்மத் (அப்பாஸி)

# حديث

(اللغة التاملية)

ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة
ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH
P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | மு.:.மின்களுக்கு மத்தியில் பரஸ்பரம் உதவி புரிதல் | 45 நிமிடங்கள் |
| 2 | கோபமும் பொறாமையும் கூடாது | 45 நிமிடங்கள் |
| 3 | இஸ்லாம் இலஞ்சத்தைத் தடுக்கின்றது | 45 நிமிடங்கள் |
| 4 | அமானிதத்தை ஒப்படைத்தல் | 45 நிமிடங்கள் |
| 5 | பெற்றோருக்கு நோவினை செய்வதும், பொய் சாட்சியம் சொல்வதும் கூடாது | 45 நிமிடங்கள் |
| 6 | மோசடி செய்வது கூடாது | 45 நிமிடங்கள் |
| 7 | கோள் சொல்லலாகாது | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | புறம் பேசலாகாது | 45 நிமிடங்கள் |
| 10 | அயல் வீட்டாரின் உரிமைகள் | 45 நிமிடங்கள் |
| 11 | தனக்குத் தேவையற்றதை முஸ்லிம் விட்டுவிடுதல் | 45 நிமிடங்கள் |
| 12 | இஸ்லாத்தில் தூய்மை | 45 நிமிடங்கள் |
| 13 | நயவஞ்சகனுடைய அடையாளம் | 45 நிமிடங்கள் |
| 14 | இறைநம்பிக்கையின் சுவை | 45 நிமிடங்கள் |
| 15 | முன்னர் கற்ற பாடங்களை மீட்டல் | 45 நிமிடங்கள் |

# 1. மு.ஃமின்களுக்கு மத்தியில் பரஸ்பரம் உதவி புரிதல்

عَنْ أَبِيْ مُوْسَى رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم : الْمُؤْمِنُ لِلْمُؤْمِنِ كَالْبُنْيَانِ يَشُدُّ بَعْضُهُ بَعْضاً، ثُمَّ شَبَّكَ بَيْنَ أَصَابِعِهِ " (متفق عليه)

ஒரு மு.ஃமின், மற்ற மு.ஃமினுக்கு கட்டிடத்தைப் போன்றவனாவான். அது ஒன்றை ஒன்று பலப்படுத்துவதைப் போல எனக் கூறி நபி (ஸல்) அவர்கள் விரல்களை இணைத்துக் காட்டினார்கள்.
அறிவிப்பவர் : அபூ மூஸா (ரலி)
ஆதாரம் : புஹாரி 481 ,முஸ்லிம் 2585.

## அறிவிப்பாளர் பற்றி

அபூ மூஸா (ரலி) அவர்கள் பிரபலமான ஸஹாபாக்களில் ஒருவராவார். இவருடைய பெயர் அப்துல்லாஹ் பின் கைஸ் பின் ஸுலைம். உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் பஸராவிலும், உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் கூபாவிலும் கவர்னராக இருந்ததுடன், ஸிப்பீன் போரில் அலீ (ரலி) அவர்களின் சார்பாக நடுவராகவும் இருந்தார். அழகிய குரல் வளமுள்ளவராகவும் திகழ்தார்கள். ஹிஜ்ரி 50ல் இறையடி சேர்ந்தார்கள்.

## சாராம்சம்

நபி (ஸல்) அவர்கள் ஒரு முஸ்லிம் மற்ற சகோதர முஸ்லிமுக்கு உதவி, ஒத்தாசை செய்வதை கட்டிடத்திற்கு ஒப்பாகக் கூறுகிறார்கள். ஒரு கட்டித்தின் கற்கள் ஒன்றுடன் ஒன்று உறுதியாக இல்லையெனில், அந்தக் கட்டிடம் எந்த பிரயோசனத்தையும் அளிக்காது. இவ்வாறே ஒரு முஸ்லிமைப் பொறுத்தவரையில் மற்ற சகோதர முஸ்லிமுக்கு உதவி ஒத்தாசை செய்வதிலிருந்து தனித்து இருக்க மாட்டான்.

## படிப்பினை

1. உதாரணம் காட்டுவதன் மூலம் மனித சிந்தனைக்கு எட்டக் கூடியவாறு கருத்து தெளிவாக்கிக் காட்டுவது கற்பித்தல் முறையிலுள்ளதாகும். இந்நபிமொழியில் கட்டிடத்தைக் கூறப்பட்டுள்ளது.
2. மு.ஃமீன்கள் தங்களுக்கு மத்தியில் உதவி, ஒத்தாசை புரிவதை தூண்டுகிறது.
3. மு.ஃமின்களுடன் மென்மையாக நடந்து கொள்வது, அவர்களுடைய உரிமைகளை மதிப்பது ஆகிய அனைத்தும் சமூகத்தில் ஒற்றுமை உருவாகக் காரணமாகும்.

# 2. கோபமும், பொறாமையும் கூடாது

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُوْلَ اللهِ صلى الله عليه وسلم قَالَ: لَا تَبَاغَضُوْا وَلَا تَحَاسَدُوْا وَلَا تَدَابَرُوْا، وَكُوْنُوْا عِبَادَ اللهِ إِخْوَانًا، وَلَا يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلَاثَةِ أَيَامٍ (متفق عليه)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **கோபம் கொள்ளாதீர்கள், பொறாமை கொள்ளாதீர்கள், புறமுதுகு காட்டாதீர்கள். அனைவரும் அல்லாஹ்வின் அடியார்கள் என்பதால் சகோதரர்களாக இருங்கள். ஒரு முஸ்லிம் தனது சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திருத்தல் கூடாது.**
அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள்.
ஆதாரம்: புஹாரி 6065 முஸ்லிம் 2558.

## அறிவிப்பாளர் பற்றி:

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபிகளாரின் பணியாளர் என்று அழைக்கப்பட்டார். ஹிஜ்ரத்திற்கு ஒரு வருடத்திற்கு முன்னர் மதீனாவில் பிறந்த இவர் சிறு வயதிலேயே இஸ்லாத்தை ஏற்றார். இவர்களின் தாயார் உம்மு ஸுலைம் (ரலி) இவருடைய 10வது வயதில் நபிகளருக்குப் பணிவிடை செய்ய அமர்த்தினார்கள். நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களுடைய ஆயுளை நீடித்து அதில் பரகத் செய்ய வேண்டுமென அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். அதன் காரணமாக அவர்கள் நீண்டகாலம் வாழ்ந்து நிறைய செல்வங்களும் குழந்தைகளும் அவர்களுக்குக் கிடைத்தன. நபிகளாரைத் தொட்டும் 2286 ஹதீஸ்களை அறிவித்தார். தனது 100வது வயதைத் தாண்டிய பின்னர் ஹிஜ்ரி 93ம் ஆண்டு பஸ்ராவில் காலமானார். நபித்தோழர்களில் இவர்களே கடைசியாக மரணித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## சாராம்சம்

கோபம், பொறாமை, புறமுதுகு காட்டுதல் ஆகிய அனைத்தும் இஸ்லாமிய சகோதரத்துவத்தை, சமூக ஒற்றுமையைப் பாதிக்கக்கூடிய அம்சங்களாகும். நமது சகோதரர்கள் எவ்வாறு ஒற்றுமையாக ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டும் என்பதை (இந்நபிமொழி) உணர்த்துகிறது. மேலும் இஸ்லாமிய நற்குணங்களையும், நல்ல பண்பாடுகளையும் உணர்த்துவதோடு நமது உள்ளங்களில் இருக்கக்கூடிய பொறாமை, கோபம் போன்ற தீய குணங்கள் அனைத்தை விட்டும் விலகி இருக்குமாறும் (இந்நபிமொழி) போதிக்கிறது. இன்னும் உறவால், இரத்தத்தால் ஏற்படும் சகோதரத்துவத்தை விட இஸ்லாத்தின் மூலம் ஏற்படும் சகோதரத்துவம் மிக பலமானது என்பதை இந்த நபி மொழி உணர்த்துகிறது. எனவே ஒரு முஸ்லிம் அவனுடைய சகோதரனை மார்க்கத்திற்காக அல்லாமல் வேறு காரணங்களுக்காக அவனை மூன்று நாட்களுக்கு அதிகம் வெறுத்திருப்பது கூடாத செயலாகும்.

## படிப்பினை

1- கோபம் கொள்ளல், பொறாமை, புறமுதுகு காட்டல், குடும்ப உறவை துண்டித்தல் ஆகியவைகளை இஸ்லாம் தடை செய்கிறது.
2- எவ்வகையிலும் ஒரு முஸ்லிமை நோவினை செய்தல் கூடாது.
3- ஒரு முஸ்லிம் தன் சகோதரனை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திருத்தல் (பேசாதிருத்தல்) ஹராமாகும்.
4- இவ்வாறு செய்தல் முஸ்லிமின் குணநலன்களில் உள்ளதல்ல.
5- முஸ்லிம்களுக்கிடையில் சகோதரத்துவம், இன்னும் நல்லிணக்கத்தையும் வலுப்பெறத் தூண்டல்.

# 3.இஸ்லாம் இலஞ்சத்தை தடுக்கிறது

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللهُ عَنْهُمَا قَالَ : لَعَنَ رَسُوْلُ اللهِ صلى الله عليه وسلم الرَّاشِيَ وَالْمُرْتَشِيَ" (رواه أبو داود والترمذي وابن ماجه وأحمد)

நபி (ஸல்) அவர்கள் இலஞ்சம் எடுப்பவனையும், இலஞ்சம் கொடுப்பவனையும் சபித்துள்ளார்கள்.
அறிவிப்பவர் : அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி)
(ஆதாரம்: அபூ தாவூத் 3582 , திர்மிதீ 1337 , இப்னு மாஜ∴. 2313 , அஹ்மத் 6532)

## அறிவிப்பாளர் பற்றி

அப்துல்லாஹ் இப்னு அம்ரு இப்னில் ஆஸ் அல்குரஷீ அஸ்ஸுஹமீ என்ற இவர் அறியப்பட்ட சிறந்த நபித்தோழராவார். தனது தந்தைக்கு முன்னரே இவர் இஸ்லாத்தில் இணைந்து கொண்டார். இவருடைய 700 பொன்மொழிகள் நபிமொழிக்கிரந்தங்களில் பதியப்பட்டுள்ளன. நபியவர்களுடன் சில யுத்தங்களில் கலந்து கொண்டதுடன், அரசியல் துறையிலும், நிர்வாகத்துரையிலும் இவர்கள் பிரபலமானவர்களாக இருந்தார்கள். ஹி. 65ல் எகிப்தில் தனது வீட்டிலே மரணித்து அங்கேயே அடக்கம் செய்யப்பட்டார்கள்.

## சாராம்சம்

நபி (ஸல்) அவர்கள் இலஞ்சம் கொடுப்பவனை அல்லாஹ்வின் அருளிலிருந்து ஒதுக்கி தூரமாக்கும் படி பிரார்த்தித்ததாக அப்துல்லாஹ் பின் அம்ரு (ரலி) அவர்கள் எங்களுக்கு அறிவிக்கின்றார்கள். இலஞ்சம் என்பது ஒரு தொகை பணத்தை தான் விரும்பி மற்றொருவருக்கு கொடுத்து தனக்கு சொந்தம் இல்லாத ஒன்றை அடைந்து கொள்வதாகும். அது அசத்தியத்திற்கு இட்டுச் செல்லும். மேலும் நபி (ஸல்) அவர்கள் மார்க்கத்திற்கு முரணான வழியில் இலஞ்சம் என்ற பெயரில் பணம் எடுப்பவனைத் சபித்துள்ளார்கள். ஏனெனில் அவன் மக்களின் செல்வத்தை முறையில்லாமல் சாப்பிடுகிறான் எனவே ஒரு முஸ்லிம் அல்லாஹ்வின் கோபத்திற்கும், அவனது தண்டனைக்கும் தன்னை உட்படுத்திக் கொள்ளாமல் சந்தேகமான விடயங்களை விட்டும் தூரமாகி இருப்பது அவசியமாகும்.

## படிப்பினை

1. இலஞ்சம் எடுப்பவனும், கொடுப்பவனும் அல்லாஹ்வின் அருளை விட்டும் தூரமாக்கப்படுகிறான். அது பெரும் பாவங்களிலுள்ளதாகும்.
2. இஸ்லாமிய சமூகத்தில் இலஞ்சம் ஏற்படுத்தக்கூடிய கடும் தீங்கின் காரணமாகவே அது ஹராமாக்கப்பட்டுள்ளது.
3. இலஞ்சம் எடுப்பதும் கொடுப்பதும் பெரும்பாவங்களில் உள்ளதாகும், எனவே உரிய முறையில் பாவமீட்சி பெறாதபட்சத்தில் அது மன்னிக்கப்பட மாட்டாது.
4. இறைவனின் கோபம், சாபம், இவ்வுலகில் வரையறுக்கப்பட்ட தண்டனை போன்றவை பெரும்பாவங்களின் அடயாளமாகும்.

# 4.அமானிதத்தை ஒப்படைத்தல்

عَنْ أَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ النَّبِيُّ صلى الله عليه وسلم: " أَدِّ الْأَمَانَةَ إِلَى مَنِ ائْتَمَنَكَ ، وَلَا تَخُنْ مَنْ خَانَكَ"

(رواه أبو داود والترمذي وأحمد.)

நபி (ஸல்) கூறினார்கள்: அமானிதத்தை உரியவருக்கு ஒப்படைத்து விடு. உனக்கு மோசடி செய்தவருக்கு நீர் மோசடி செய்ய வேண்டாம்.
அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).
(ஆதாரம்: அபூ தாவுத் 3537 , திர்மிதி 1264 , அஹ்மத் 15424)

## அறிவிப்பாளர் பற்றி :

“ராவியதுல் இஸ்லாம்” என்ற சிறப்புப்பெயர் பெற்றவர் ஆபூ ஹுரைரா அப்துர் ரஹ்மான் பின் ஸக்ர் அத்தௌஸீ அல்யமானீ (ரலி). ஏற்கனவே இஸ்லாத்தில் நுழைந்து “கைபர்” போர் நடைபெற்ற ஹிஜ்ரி 7ம் ஆண்டு (மதீனா) வந்தார்கள். பின்னர் தொடர்ந்து 4 வருடங்கள் நபிகளாருடனே இருந்தார்கள். நபிகளாரைத் தொட்டும் அதிக நபிமொழிகளை மனனமிட்டு, 5374 ஹதீஸ்களை அறிவித்து, நபித்தோழர்களில் மிகக் கூடுதலான நபிமொழிகளை அறிவித்தவர் என்ற பெயருக்கு சொந்தமானார். மேலும் மதீனாவின் பிரபல சட்டக்கலை வல்லுனர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். ஹிஜ்ரி 57ம் ஆண்டு மதீனாவில் மரித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

## சாராம்சம்

அமானிதப் பொருளை அதன் உரிமையாளரிடம் ஒப்படைக்குமாறு இந்த ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் ஏவுகிறார்கள். ஈடு வைத்தல், இரவல் இது போன்றவைகளும் இதனுள் அடங்குகிறது. அமானிதத்திற்கு இஸ்லாத்திலே மகத்தான அந்தஸ்து இருக்கிறது. மேலும் அது சிறந்த பண்புகளில் நின்றும் உள்ளது. ஒவ்வொரு முஸ்லிமும் அதைக் கடைபிடித்து நடப்பது கடமையாகும். ஒரு மனிதர் நம்பிக்கையாளராக இருந்தால் மனிதர்கள் அவரை மதிக்கின்றார்கள். மேலும் அவரைச் சூழ உள்ளவர்கள் நம்புகின்றார்கள், அவரைச் சுற்றியுள்ளவர்களிடத்திலும் மதிப்பைப் பெறுகிறார்.
அதே போன்று தன்னுடைய கடமைகளை சரியாக செய்கின்ற ஓர் ஆசிரியரும் நம்பிக்கையாளராகவே கருதப்படுவார். அவர் அல்லாஹ்வினது நன்றிக்கும், மனிதர்களின் புகழுக்கும் உரியவராவார். அதே போன்று தன்னுடைய வேலைகளை சரியாக நிறைவேற்றுகின்ற ஒரு மாணவனும் இன்னும் இரகசியம், மானம், செல்வம் இவைகளை பாதுகாக்கக்கூடிய ஒருவனும் நம்பிக்கையாளனாகவே கருதப்படுவான். இவர்களும் நன்றிக்கும் புகழ்சிக்கும் உரியவராவார்கள்.
இரகசியம், மானம், செல்வம் போன்றவற்றை பாதுகாக்காமல் பொறுப்பற்ற நிலையிலும் இன்னும் அமானிதங்களை எவர் மறுக்கின்றார்களோ அவர்களுடைய நிலைமை இந்த உலகத்தில் கேலிக்குரியதாகவும், பழிப்புக்குரியதாகவுமே இருக்கும். ஒரு உத்தியோகஸ்தானக இருந்தால் மக்களுக்கு சேவை செய்வதை விட்டு அவன் பிரிந்திருப்பான். ஒரு வியாபாரியாக இருந்தால் மக்கள் அவனை விட்டு ஒதுங்கி விடுவார்கள். மேலும் கொடுக்கல் வாங்கலிலே அவன் மீது நம்பிக்கை வைக்க மாட்டார்கள். எனவே ஒவ்வொரு முஸ்லிமும் தன்னிடம் அமானிதமாக ஒப்படைக்கப்பட்ட பொருட்களில் உண்மையாளனாக இருக்க வேண்டும். இன்னும் இரகசியங்களையும், மானங்களையும் பாதுகாப்பதும், இன்னும் மக்கள் விரும்பும்

விதத்தில் நடந்து கொள்வதும் அவசியமாகும். ஏனெனில் எவரிடம் அமானிதம் இல்லையோ அவரிடம் ஈமான் இல்லை.

## படிப்பினை

1. அமானிதத்தை அதற்கு உரியவரிடம் ஒப்படைப்பது கடமையாகும்.
2. மோசடிக் காரர்களின் பழக்க வழக்கங்களை போன்று நமது பழக்க வழக்கங்களை அமைத்துக் கொள்வது தடையாகும்.
3. பலி வாங்குவதை இந்நபிமொழி தடை செய்துள்ளது. "உனக்கு மோசடி செய்தவருக்கு நீர் மோசடி செய்ய வேண்டாம்" என்ற வார்தையிலிருந்து பலிக்குப் பலியெடுப்பது தடை செய்யப்பட்டுள்ளதை உணரலாம்.
4. எமக்கு அநீதி இழைத்தவர்களுடனும் நாம் அழகான முறையில் நடப்பதே நற்குணமாகும்.
5. "உன்னைத் துண்டித்தவனுடன் சேர்ந்து நட, உனக்கு அநீதி இழைத்தவனை மன்னித்து விடு" என நபி (ஸல்) அவர்கள் இன்னொரு நபிமொழியில் கூறியுள்ளார்கள்.

# 5.பெற்றோருக்கு நோவினை செய்வதும், பொய் சாட்சியம் சொல்வதும் கூடாது

عَنْ أَبِي بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَلَا أُنَبِّئُكُمْ بِأَكْبَرِ الْكَبَائِرِ؟ ثَلَاثًا، قَالُوا بَلَى يَا رَسُولَ اللَّهِ، قَالَ : الْإِشْرَاكُ بِاللَّهِ، وَعُقُوقُ الْوَالِدَيْنِ، وَجَلَسَ وَكَانَ مُتَّكِئًا فَقَالَ : أَلَا وَقَوْلُ الزُّورِ، قَالَ : فَمَا زَالَ يُكَرِّرُهَا حَتَّى قُلْنَا : لَيْتَهُ سَكَتَ. (متفق عليه)

உங்களுக்கு பெரும் பாவங்கள் மூன்றை அறிவிக்கட்டுமா என நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு சொன்னார்கள்: அல்லாஹ்வுக்கு இணை வைத்தலும், பெற்றோர்களுக்கு நோவினை செய்வதும் ஆகும். சாய்ந்து கொண்டிருந்த நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்து மேலும் பொய்ச்சத்தியம் செய்வதும் எனத் திரும்பத் திரும்பத் சொல்லிக் கொண்டே இருந்தார்கள். இவர்கள் மௌனமாக மாட்டார்களா? என்று நாம் கூறும் வரை சொல்லிக் கொண்டே இருந்தார்கள்.
அறிவிப்பவர் : அபூ பக்ரா (ரலி).
ஆதாரம் : புஹாரி 2654 முஸ்லிம் 88)

## அறிவிப்பாளர் பற்றி

நுபை.். இப்னு ஹாரிஸ் இப்னு கல்தா அஸ்ஸகபி என்பது அவருடைய பெயர். அபூ பக்ரா என்ற புனைப்பெயரினால் பிரபல்யமடைந்தவர். "பக்ரா" என்பது கப்பி. நபிகளார் தாஇப் நகரை வெற்றிகொண்ட தினம் இவர்கள் கப்பி மூலம் தண்ணீர் அள்ளிக் கொண்டிருந்தார்கள். அதனால் அபூ பக்ரா என்றழைக்கப்பட்டார். நபி (ஸல்) அவர்களைத் தொட்டும் சில ஹதீஸ்களை அறிவிக்கிறார்கள். சில யுத்தங்களிலும் கலந்து கொண்டவர். ஹிஜ்ரி 51ல் காலமானார்.

## சாராம்சம்

பெரும் பாவங்கள் அதிகமாக இருக்கின்றன அதில் மிகவும் கடினமானது அல்லாஹ்வுக்கு சொல்லால், செயலால், அல்லது அவனது பெயரால், பண்பால் இணை வைத்தலாகும். இது மிகப் பெரும் பாவமாக இருப்பதால் பெரும் பாவங்களின் வரிசையில் இதனை ஆரம்பமாக கூறினார்கள். பின்னர் பெற்றோருக்கு நோவினை செய்வதைக் கூறினார்கள். அதுவும் பெரும் பாவமாகும் அவனுக்கும் தண்டனை இருக்கிறது. ஒரு முஸ்லிம் எப்போதும் பெற்றோருக்கு நன்மை செய்யக் கூடியவனாக இருப்பது கடமையாகும். அவர்கள் சிறு பிராயத்திலிருந்தே அவனை அன்பு, இரக்கம் காட்டி பராமரிக்கிறார்கள். பெற்றோருக்கு நன்மை செய்வதை இறைவன் ஏவுகிறான். அவர்களுக்கு நோவினை செய்வதை இறைவன் தடுக்கிறான்.

﴿ وَقَضَىٰ رَبُّكَ أَلَّا تَعْبُدُوٓاْ إِلَّآ إِيَّاهُ وَبِٱلْوَٰلِدَيْنِ إِحْسَٰنًاۚ إِمَّا يَبْلُغَنَّ عِندَكَ ٱلْكِبَرَ أَحَدُهُمَآ أَوْ كِلَاهُمَا فَلَا تَقُل لَّهُمَآ أُفٍّ وَلَا تَنْهَرْهُمَا وَقُل لَّهُمَا قَوْلًا كَرِيمًا ﴾ الإسراء: ٢٣

(நபியே) உமதிரட்சகன் அவனைத் தவிர (மற்றெவரையும்) நீங்கள் வணங்கக் கூடாதென்றும், பெற்றோருக்கு உபகாரம் செய்ய வேண்டுமென்றும் கட்டளையிடடிருக்கிறான், அவ்விருவரில் ஒருவரோ, அல்லது அவ்விருவருமோ உம்மிடத்தில் திண்ணமாக முதுமையை அடைந்து விட்டால், அவ்விருவருக்கும் (இழித்துக் கூறப்படும் வார்த்தைகளிலுள்ள) சீ என்று கூட நீ சொல்ல வேண்டாம். (உம்மிடம் இருந்து) அவ்விருவரையும் விரட்டி விடவும் வேண்டாம் அவ்விருவருக்கும் மரியாதையான வார்த்தையைக் கூறுவீராக. (அல் இஸ்ரா : 23)

மனிதர்களில் வழிப்பட்டு, மதித்து கட்டுப்பட்டு நடப்பதில் மிக மேலானவர்கள் பெற்றோர்களே. அவர்கள் பாவங்களுக்கு தூண்டாத பட்சத்தில் அவர்களுக்கு கட்டுப்படுவது கடமையாகும். இந்தப் பெரும் பாவத்தில் உள்ளதுதான் மன முரண்டாக ஒரு பக்கம் சாய்ந்து, நீதி தவிர்ந்து பக்கச் சார்புடன் பொய் சாட்சியம் சொல்வதாகும். இந்த விடயத்தை சஹாபாக்களுக்கு அறிவிப்பதற்கு நபி (ஸல்) அவர்கள் மிகவும் கவனம் செலுத்தியுள்ளார்கள். அது நாவுக்கு இலேசாக இருப்பதன் காரணமாக மக்கள் இந்த விடயத்தில் பொடுபோக்காக இருக்கின்றார்கள். போட்டி, பொறாமை, காரணமாக இந்த விடயத்தில் மக்கள் தொடர்ந்தும் இருக்கின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் மௌனமாக மாட்டார்களா? என்று சஹாபாக்கள் சொல்லும் வரைக்கும் தொடாந்து சொல்லிக் கொண்டே இருந்தார்கள். எவரை அல்லாஹ் இஸ்லாத்தின் மூலம் கண்ணியப்படுத்தினானோ அவர் அல்லாஹ்வின் கோபத்திலும், அவனது தண்டனையிலும் விழாமலிருக்க இவ்வாறான பொரும் பாவங்களில் ஈடுபடாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளட்டும்.

## படிப்பினை

1-நபி (ஸல்) அவர்கள் தன் தோழர்களை நேர்வழி படுத்தி அவர்களுக்கு உபதேசமும் செய்துள்ளார்கள்.
2-அல்லாஹ்விற்கு இணை வைத்தலும், பெற்றோர்க்கு நோவினை செய்தலும் தடையாகும்.
3-பொய் சாட்சியம் சொல்வது தடையாகும்.
4-சஹாபாக்கள் நபி (ஸல்) அவர்கள் மீது கொண்ட அன்பையும், அவா்களைத் தொந்தரவு பண்ணுவதை வெறுப்பதையும் இந்நபிமொழியுனூடாகக் காணலாம்.

# 6.மோசடி செய்வது கூடாது

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اَللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مَرَّ عَلَى صُبْرَةِ طَعَامٍ، فَأَدْخَلَ يَدَهُ فِيهَا، فَنَالَتْ أَصَابِعُهُ بَلَلًا، فَقَالَ :" مَا هَذَا يَا صَاحِبَ اَلطَّعَامِ؟"، قَالَ: أَصَابَتْهُ اَلسَّمَاءُ يَا رَسُولَ اَللَّهِ، فَقَالَ : أَفَلَا جَعَلْتَهُ فَوْقَ اَلطَّعَامِ؛ كَيْ يَرَاهُ اَلنَّاسُ؟ مَنْ غَشَّ فَلَيْسَ مِنِّي. (رواه مسلم والترمذي)

நபி (ஸல்) அவர்கள் ஒரு தினம் உணவுத் தானியங்கள் விற்கும் இடமாகச் சென்றார்கள். அப்போது ஒருவரை அணுகி தானியத்தினுள் தனது கையை திணித்தார்கள். தனது விரல்கள் ஈரமாக இருப்பதைக் கண்டு வியாபாரியிடம் இது என்ன? என்று கேட்டார்கள் அதற்கவர் மழை நீர் அடைந்து விட்டது அல்லாஹ்வின் தூதரே! என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் மக்கள் பார்க்கும் வண்ணம் மேலால் வைத்திருக்கலாமே என்று கூறிவிட்டு எவன் மோசடி செய்கின்றானோ அவன் தன்னைச் சார்ந்தவன் இல்லை என்று கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம்: முஸ்லிம் 102, திர்மிதி 1315)

அறிவிப்பாளர் பற்றி : அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

## சாராம்சம்

நபி (ஸல்) அவர்கள் இந்த ஹதீஸ் மூலமாக மக்கள் தங்கள் வியாபாரத்திலும், கொடுக்கல் வாங்கலிலும், வாடிக்கையாளர்களை ஏமாற்றுவதிலிருந்தும் மோசடி செய்வதிலிருந்தும் தூரமாகி இருக்கும் படி வழி காண்பிக்கிறார்கள். ஏனெனில் இதன் காரணமாக மக்களுக்கிடையில் மனக் குரோதமும், மனக்கசப்பும் இஸ்லாமிய சகோதரத்துவத்தில் விரிசலும் ஏற்படுகிறது. இதை இஸ்லாம் விரும்பவில்லை. மாற்றமாக ஒரு வியாபாரி வியாபாரப் பொருட்களில் உள்ள குறைகளை எடுத்துச் சொல்லி வாடிக்கையாளர்களின் விருப்பத்திற்கொப்ப விற்பனை செய்வதை இஸ்லாம் வலியுறுத்துகிறது. இல்லையேல் அவன் இறைவனின் கோபத்திற்கும், சாபத்திற்கும் உட்படுவதோடு பாவியாகவும் கணிக்கப்படுகிறான்.

## படிப்பினை

1.வியாபாரி தன் வியாபாரப் பொருட்களில் குறைகளை மக்களுக்கு தெளிவு படுத்தி விற்பது அவசியமாகும்.
2.கொடுக்கல் வாங்கலில் மோசடி செய்வது ஹராமாகும். மேலும் அதனை செய்பவர்கள் கடும் தண்டனைக்கு உட்படுத்தப்படுவார்கள்.
3.முஸ்லிம்கள் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்துகொள்வது கடமையாகும்.
4. “எவன் மோமசடி செய்கிறானோ அவன் என்னைச் சேர்ந்தவனல்ல” என்பதன் விளக்கம், அவன் பரிபூரண முஸ்லிம் இல்லை என்பதாகும்.
5. மோசடி என்பது வியாபாரத்தில் மாத்திரமல்லாது பரீட்சை, விளையாட்டு ஏனைய அனைத்திலும் தவிர்க்கப்பட வேண்டியவையே.

# 7.கோள் சொல்லலாகாது

عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُوْدٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: إِنَّ رَسُوْلَ اللهِ صلى الله عليه وسلم قَالَ: أَلَا أُنَبِّئُكُمْ مَا الْعَضْهُ؟ هِيَ النَّمِيْمَةُ الْقَالَةُ بَيْنَ النَّاسِ" (رواه مسلم)

நபி (ஸல்) அவர்கள் (அள்ஹ்) என்றால் என்ன என்று உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று கூறி விட்டு அதுதான் மக்களுக்கு மத்தியில் கோள் சொல்லித் திரிவதாகும் எனக் கூறினார்கள்.
அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)
(ஆதாரம்: முஸ்லிம் 2606)

## அறிவிப்பாளர் பற்றி

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) நபித்தோழர்களில் பிரபலமானவரும், மிகத் திறமையாக அல்குர்ஆனை பாராயணம் செய்யக் கூடியவருமாவார். இவர்கள் நபியவர்களிடமிருந்து அறிவித்த நபிமொழிகள் 848. நபியவர்களுடன் அனைத்து யுத்தங்களிலும் கலந்து கொண்டார்கள். கலீபா உமர் (ரலி) அவர்கள் தனது ஆட்சி காலத்தில் கூபாவிற்கு மார்க்கத்தை கற்றுக்கொடுக்க இவர்களை அனுப்பினார்கள். பின்னர் உஸ்மான்(ரலி) அவர்கள் தனது ஆட்சியில் கூபாவிற்கு கவர்னராக நியமித்தார்கள். பின்னர் மதீனாவிற்குத் திரும்பும்படி ஏவினார்கள். தனது 60க்கும் 70க்கும் இடைப்பட்ட வயதில் ஹிஜ்ரி 32 ம் ஆண்டு மதீனாவில் மரணித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

## சாராம்சம்

இஸ்லாம் அன்பு, கருணை, பரஸ்பரம் ஒற்றுமையின் பால் அழைக்கின்ற மார்க்கமாகும். அதே வேளை குரோதம், பிணக்கு போன்ற சமூக ஒற்றுமையை சீர்குலைக்கக் கூடிய, ஒற்றுமையை துண்டிக்கக்கூடிய கோள் சொல்லித் திரிவதிலிருந்து இஸ்லாம் எச்சரிக்கிறது. கோள் சொல்லித் திரிவது மக்களுக்கு மத்தியில் பெரும் பிணக்கையும், குரோதத்தையும் ஏற்படுத்துகிறது. சூனியக்காரனால் ஒரு வருடத்தில் செய்ய முடியாததை கோள் சொல்லித் திரிபவனும் பொய்யனும் ஒரு மணித்தியாலத்தில் செய்து முடிப்பார்கள். எனவே ஒருவன் ஒரு விடயத்தை கேள்விப்பட்டால் அதனை உறுதிப்படுத்திக் கொள்வதோடு சந்தேகத்தை விட்டும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

﴿ يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِن جَآءَكُمْ فَاسِقُۢ بِنَبَإٍ فَتَبَيَّنُوٓاْ أَن تُصِيبُواْ قَوْمًۢا بِجَهَـٰلَةٍ فَتُصْبِحُواْ عَلَىٰ مَا فَعَلْتُمْ نَـٰدِمِينَ ﴾ الحجرات: ٦

(விசுவாசிகளே) (∴பாசிக் எனும்) தீயவன் உங்களிடம் ஏதேனும் செய்தியைக் கொண்டு வந்தால் (அதை உடனே அங்கீகரித்து) அறியாமையால் (குற்றமற்ற) ஒரு சமூகத்தாருக்கு நீங்கள் தீங்கிழைத்து விடாதிருப்பதற்காக அதனை தீர்க்க விசாரணை செய்து தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்.(அவ்வாறு நீங்கள் செய்து கொள்ளவில்லையென்றால்) பின்னர் நீங்கள் செய்தவைகளைப் பற்றி நீங்களே கைசேதப்படக்கூடியவர்களாக ஆகிவிடுவீர்கள்.(49:6) கோள்காரனை விட்டும் நீங்கள் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள், அவன் எவ்வித மதிப்போ நற்குணமோ இல்லாதவன். மக்களை துன்புறுத்துவதிலே ஈடுபட்டு அவர்கள் வேதனையில் இன்பம் காண்பான். அல்லாஹ் அவனின் தீங்கிலிருந்து எம்மைப் பாதுகாப்பானாக.

## படிப்பினை

1-கோள் சொல்வதும், குறை சொல்வதும் ஹராமானதாகும்
2-இரண்டும் பெரும்பாவங்களில் நின்றும் உள்ளது.

# 8.புறம் பேசலாகாது

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اَللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : أَتَدْرُونَ مَا اَلْغِيبَةُ؟ قَالُوا : اَللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ، قَالَ: ذِكْرُكَ أَخَاكَ بِمَا يَكْرَهُ، قِيلَ: أَرَأَيْتَ إِنْ كَانَ فِي أَخِي مَا أَقُولُ؟ قَالَ: إِنْ كَانَ فِيهِ مَا تَقُولُ فَقَدْ اِغْتَبْتَهُ, وَإِنْ لَمْ يَكُنْ فَقَدْ بَهَتَّهُ (رواه مسلم)

நபி (ஸல்) அவரகள் (நபித் தோழர்களை) நோக்கி (அல்கீபத்) புறம் பேசுதல் என்றால் என்னவென்று தெரியமா? என்று கேட்டார்கள். அதற்கவர்கள் அல்லாஹ்வும், அவனது தூதரும் அறிவார்கள் என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், உனது சகோதரன் வெறுக்கக்கூடிய விடயத்தை அவன் இல்லாத நேரத்தில் சொல்வதாகும். தான் சொல்லக் கூடிய விடயம் தன் சகோதரனிடம் இருந்தாலுமா? என நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. நீ சொல்லும் விடயம் உன் சகோதரனிடம் இருந்தால் அவனைப் பற்றி புறம் பேசி விட்டாய், நீ சொல்லுவது அவனிடம் இல்லாதிருந்தால் அவன் மீது இட்டுக்கட்டிவிட்டாய் என்று கூறினார்கள். (ஆதாரம் முஸ்லிம் 2589)

அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாரம்சம்

தன் சகோதரன் அல்லாத இறைநிராகரிப்பாளர்களாக இருந்தால் அவர்களைப் பற்றி பேசுவதால் குற்றமில்லை உதாரணம்: கிறிஸ்தவர்கள், யூதர்கள் மற்றும் அவர்களின் அழைப்பை ஏற்று வழி கெட்டவர்கள் இஸ்லாத்தை விட்டு வெளியேறியவர்கள் இவர்களைப் பற்றி பேசுவது புறம் பேசுவதாக அமையாது என்பதற்கு இந்நபிமொழி சான்றாக உள்ளது. இந்த ஹதீஸில் சகோதரன் என்று சொல்லப்பட்டதன் மூலம் புறம் பேசுபவன் புறம் பேசப்படுபவன் தனது சகோதரன்தான் என்ற உணர்வு ஏற்படத் தூண்டுகின்றது. ஏனெனில் யாரும் தனது சொந்த சகோதரனுடைய குறைகளை வெளியில் சொல்லித் திரிய விரும்புவதில்லை. அக்குறைகளை மறைக்கவே முற்படுவான். மேலும் இந்த ஹதீஸில் அவன் வெறுக்கக்கூடிய அம்சங்கள் என குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது உண்மையில் அவர் வெறுக்கக்கூடிய அம்சங்களைப் பேசக் கூடாது. அது அல்லாமல் அவர் வெறுக்காத அம்சங்களை பரிகாசம் செய்யக் கூடியவர்கள் பேசுவதனால் புறம் பேசுவதாக அமையாது. புறம் பேசுவது ஹராம் என்பது அறியப்பட்ட, அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும்.

## படிப்பினை

1.முஸ்லிம்களின் மானங்களை மதிப்பதை இஸ்லாம் விரும்புகிறது.
2.புறம் பேசுவது ஹராமாகும். அதாவது ஒரு முஸ்லிம் தன் சகோதரன் வெறுக்கக்கூடியதை அவன் இல்லாத இடத்தில் சொல்வதே புறமாகும்.
3.புறம் பேசுதல் முஸ்லீம்களுக்கிடையில் பகைமையை உண்டு பண்ணுவதற்கு காரணமாக அமையும்.
4.முஸ்லிம்களுக்கு மத்தியில் பொய் பேசுவது ஹராமாகும்.
5.மனிதர்களுடைய குறைகளை அவர்களிடத்தில் இருந்தாலும், அவர்களைக் குறைகாணும் நோக்கிலோ அல்லது இழிவுபடுத்தும் நோக்கிலோ பேசினால் அது புறமாகவே கணிக்கப்படும். உபதேசம் செய்யும் நோக்கிலோ, விசாரணையின் போதோ, ஹதீஸ் அறிவிப்பாளர்களின் குறைகளைக் கூறுவதோ புறமாக மாட்டாது.
6.தன் சகோதர முஸ்லிம் விரும்பக் கூடியதை ஒருவன் பேசுவது கடமையாகும்.

# 9.அயல் வீட்டாரின் உரிமைகள்

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ عَنْ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلَا يُؤْذِ جَارَهُ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ. (متفق عليه)

அல்லாஹ்வைக் கொண்டும், மறுமை நாளைக் கொண்டும் யார் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் தன் அயலாரை நோவினை செய்யாமல் இருக்கட்டும். மலும் எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் தன் விருந்தினரை கண்ணியப்படுத்தட்டும். யார் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் நல்லதையே பேசட்டும் அல்லது வாய் மூடி மௌனமாக இருக்கட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).
ஆதாரம் : புஹாரி 6136, முஸ்லிம் 47.

அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாராம்சம்

இந்த ஹதீஸ் அயல் வீட்டாருக்கு உதவி, ஒத்தாசை புரிவதை மிகவும் வலியுறுத்துகிறது. அந்த செயலை ஈமானுடன் இணைத்துக் காட்டுகிறது. அயலாரை நோவினை செய்வதை பெரும் பாவமாக இந்த ஹதீஸ் சுட்டிக்காட்டுகிறது. அயலான் நல்லவனாகவோ அல்லது தீயவனாகவோ எப்படி இருந்தாலும் நோவினை செய்வதிலிருந்து தவிர்ந்து அவனுக்கு உரிய உரிமைகளைக் கொடுக்க வேண்டும். அயல் வீட்டானுக்குரிய உரிமை என்பது சிறந்ததை அவனுக்கு நாடுவது, நல்லுபதேசம் செய்வது, அவனுக்கு ஹிதாயத்தைக் கொண்டு துஆ கேட்பது, அவனுக்கு நோவினை செய்யாமலிருப்பது போன்ற அனைத்தையும் உள்ளடக்கும்.

## படிப்பினை

1-இஸ்லாம் மக்கள் மத்தியில் பரஸ்பர அன்பையும், ஒற்றுமையையும் ஒருவருக்கொருவர் உதவி புரிவதையும் தூண்டுகிறது.
2-அயலாருக்கு உதவுவது அவர்களுக்கு மத்தியில் இருக்கக் கூடிய தொடர்புகளை வவலுப்படுத்துகின்றது
3-அண்டை வீட்டுப் பிள்ளைகளை சொல்லாலோ அல்லது செயலாலோ நோவினை செய்யாமல் இருப்பது சிறந்த பண்பாகும்.
4-அண்டை வீட்டில் நடப்பவைகளை உற்றுப் பார்ப்பது கெட்ட பண்பாகும்.
5-எந்த வகை தொந்தரவாக இருந்தாலும் அதிலிருந்து அண்டை வீட்டார் ஈடேற்றம் பெற வேண்டும்.
6-விருந்தினரை கண்ணியப்படுத்துவது கடமையாகும்.
7-குறைவான பேச்சு ஈமானின் பூர்த்திக்கு காரணமாக அமைகிறது.

# 10.தனக்குத் தேவையற்றதை முஸ்லிம் விட்டுவிடுதல்

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ : قَالَ رَسُولُ اَللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ : "مِنْ حُسْنِ إِسْلَامِ اَلْمَرْءِ تَرْكُهُ مَا لَا يَعْنِيهِ"

ஒரு மனிதன் தனக்குத் தேவையில்லாத விடயங்களை விட்டுவிடுவது இஸ்லாத்தில் சிறந்த பண்புகளில் நின்றும் உள்ளதாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).
ஆதாரம் : திர்மிதி 2317

அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாராம்சம்:

மேற்கூறப்பட்ட ஹதீஸ் பொதுவாக அனைத்து நபிமார்களினதும் கருத்தாக இருக்கிறது. நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் ஏடுகளிலும் இது போன்ற ஓர் அறிவிப்பு இடம் பெற்றுள்ளது. எவர் தனது பேச்சை செயல்களோடு கணக்கிட்டால் தேவையில்லாத பேச்சுக்கள் குறைந்துவிடும். இந்நபிமொழி தேவையில்லாத செயல்களையும் உள்ளடக்குகின்றது. எனவே அவர் உலகவிடயங்களில் மூழ்குவது, அரசியல், பதவிகளைத் தேடுவது, புகழை விரும்புவது போன்ற தனது மார்கத்திற்கோ உலக விடயங்களுக்கோ தேவையில்லாததை விட்டும் தவிர்ந்து கொள்வதும் இதில் உள்ளடங்கும்.

## படிப்பினை

1.இஸ்லாம் முஸ்லிம்களை தமது மார்க்க உலக விடயங்களில் தேவையில்லாமல் தலையிடுவதிலிருந்து தவிர்ந்து கொள்ளுமாறு தூண்டுகிறது.
2.ஒரு முஸ்லிம் தனக்குத் தேவையில்லாத சொல், செயல்களை விட்டுவிடுவது அவனுடைய பரிபூரண இஸ்லாத்திற்கு அடையாளமாகும்.
3.ஒரு முஸ்லிம் தன்னிடம் கேட்கப்படாத கேள்விக்கு பதில் அளிப்பதை விட்டு விட வேண்டும்.
4.நல்ல விடயங்களின்பால் வழிகாட்டுவது முஸ்லிமுக்குத் தேவையானதொன்றாகும். எனவே நலவை ஏவி தீமையை விட்டும் தடுப்பதை தேவையில்லாத விடயமாகக் கருதலாகாது.

# 11. இஸ்லாத்தில் தூய்மை

عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُوْدٍ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : "لاَ يَدْخُلُ الجَنَّةَ مَنْ كَانَ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّة مِنْ كِبْرٍ !" فَقَالَ رَجُلٌ : إنَّ الرَّجُلَ يُحِبُّ أَنْ يَكُونَ ثَوْبُهُ حَسَناً ، ونَعْلُهُ حَسَنَةً ؟ قَالَ : "إِنَّ اللهَ جَمِيلٌ يُحِبُّ الجَمَالَ ، الكِبْرُ : بَطَرُ الحَقِّ وَغَمْطُ النَّاسِ" (رواه مسلم)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எவருடைய உள்ளத்தில் ஒரு கடுகு அளவு பெருமை இருக்கிறதோ, அவர் சுவர்க்கம் புக மாட்டார். அப்போது ஒரு மனிதர் கேட்டார்: ஒரு மனிதனுடைய ஆடை, அவனுடைய பாதணி சுத்தமாக இருப்பதை விரும்புகிறான். அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், நிச்சயமாக அல்லாஹ் அழகானவன். அழகையே விரும்புகிறான். பெருமை என்பது மக்களுக்கிடையில் உண்மையை மறைத்து பெருமை பாராட்டுவதாகும் என்றார்கள். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவிக்கிறார்கள். (ஆதாரம்: முஸ்லிம் 91)

அறிவிப்பாளர் பற்றி 7ம் நபிமொழியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாராம்சம்:

இந்த ஹதீஸ் சுத்தத்தை தூண்டுவதோடு தற்பெருமையையும் வெறுக்கிறது. யார் மக்களுக்கிடையில் உண்மையை மறைத்து உயர்வை விரும்புகிறாரோ அவர் மக்களால் இழிவாகவே கருதப்படுவார். பெருமை என்பது ஒன்று உள்ரங்கமானதாக இருக்கும் இது உள்ளத்தில் தோன்றுவதாகும். இதனைத்தான் தற்பெருமை என்று கூறப்படும், மற்றது வெளிப்படையானது இது செயல்களின் வெளிப்பாடாக இருக்கும். இது உள்ளத்தில் ஏற்படக்கூடிய தற்பெருமையின் பிரதிபலிப்பாக இருக்கும். எவர் தற்பெருமையையும், பெருமையும் தன்னிடத்தில் வைத்துள்ளாரோ அவர் எச்சரிக்கைக்குரியவராவார்.

## படிப்பினை

1. தற்பெருமையடித்து மக்களை இழிவாக கருதுவதை இந்த ஹதீஸ் தடுக்கிறது.
2. தூய்மை என்பது மனிதன் அணியக்கூடிய மற்றும் பாவிக்கக்கூடிய அனைத்தையும் உள்ளடக்குகிறது.
3. தெரு, கல்விக்கூடம், வீடு போன்றவற்றையும் சுத்தமாக வைப்பதை இந்த ஹதீஸ் குறித்துக் காட்டுகிறது.
4. குறைந்தது கிழமைக்கு ஒரு முறையாவது குளிப்பது விரும்பத்தக்கது.
5. உண்மையை ஏற்றுக்கொள்ள மறுப்பதும் பெருமையின் அடையாளங்களில் உள்ளதாகும்.

# 12. நயவஞ்சகனுடைய அடையாளம்

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : آيَةُ الْمُنَافِقِ ثَلَاثٌ، إِذَا حَدَّثَ كَذَبَ، وَإِذَا وَعَدَ أَخْلَفَ، وَإِذَا اؤْتُمِنَ خَانَ. (متفق عليه)

நயவஞ்சகனுடைய அடையாளங்கள் மூன்று, பேசினால் பொய் உரைப்பான், வாக்களித்தால் மாறு செய்வான், நம்பினால் மோசடி செய்வான் என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).
ஆதாரம் : புஹாரி 33 , முஸ்லிம் 59

அறிவிப்பாளர் பற்றி 4ம் நபிமொழியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சாரம்சம் :**

யதார்த்தமான நயவஞ்சகத்திற்கு இட்டுச் செல்லும் என்று அஞ்சக்கூடிய இந்த அடையாளங்களை ஒருவன் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இம்மூன்று விடயங்களும் சமூகத்தில் பாரிய விளைவுகளை ஏற்படுத்தக் கூடியன. எனவே இது போன்ற பண்புகளை விட்டும் தவிர்ந்து கொள்வதை இந்நபிமொழி வலியுறுத்துகின்றது.

**படிப்பினை**

1-நம்பிக்கை மோசடி செய்தல், வாக்கு மீறுதல், பொய் உரைத்தல் இது போன்ற தீய பண்புகளுக்கும், மோசமான பழக்கங்களுக்கும் எதிராக போராடுவது இஸ்லாத்தின் மகத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது.
2-நயவஞ்சகம் அல்லாஹ்விடத்திலே நிராகரிப்பை விட பெரிதாக இருப்பதனால் அதற்கு கடும் எச்சரிக்கை வந்துள்ளது.
3-நயவஞ்சகனின் எந்தப் பண்பாக இருந்தாலும் அதிலிருந்து தவிர்ந்து கொள்ளல் வேண்டும்.
4-நயவஞ்சகனின் பண்புகளைக் கொண்டிருப்பவன் அல்லாஹ்விடத்திலும் மக்களிடத்திலும் வெறுப்புக்குரியவனாகவே கருதப்படுவான்.
5-பேசினால் பொய் உரைக்காமல் இருப்பதும், வாக்களித்தால் மாறு செய்யாமல் இருப்பதும், நம்பினால் மோசடி செய்யாமல் இருப்பதும் விசுவாசியின் பண்பாகும்.

# 13. இறைநம்பிக்கையின் சுவை

عَنْ أَنَسٍ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ ثَلَاثٌ مَنْ كُنَّ فِيهِ وَجَدَ حَلَاوَةَ الْإِيمَانِ أَنْ يَكُونَ اللهُ وَرَسُولُهُ أَحَبَّ إِلَيْهِ مِمَّا سِوَاهُمَا وَأَنْ يُحِبَّ الْمَرْءَ لَا يُحِبُّهُ إِلَّا لِلَّهِ وَأَنْ يَكْرَهَ أَنْ يَعُودَ فِي الْكُفْرِ كَمَا يَكْرَهُ أَنْ يُقْذَفَ فِي النَّارِ (متفق عليه)

யாரிடத்தில் மூன்று விடயங்கள் இருக்கின்றதோ அவர் ஈமானின் சுவையைக் கண்டு கொள்வார். “அல்லாஹ்வும் அவனது தூதரும் அவருக்கு மற்ற அனைவரையும் விட நேசத்திற்குரியவர்களாக இருக்க வேண்டும்”. “ஒரு மனிதனை நேசிப்பவராக இருந்தால் அல்லாஹ்வுக்காகவே நேசிப்பார்”. “குப்ரிலே மீள்வதை நெருப்பிலே எரிவதை வெறுப்பது போல வெறுக்க வேண்டும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர் : அனஸ் (ரலி).
ஆதாரம்: புஹாரி 16 , முஸ்லிம் 43

## அறிவிப்பாளர் பற்றி :

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் நபிகளாரின் பணியாளர் என்று அழைக்கப்பட்டார். ஹிஜ்ரத்திற்கு ஒரு வருடத்திற்கு முன்னர் மதீனாவில் பிறந்த இவர் சிறு வயதிலேயே இஸ்லாத்தை ஏற்றார். இவர்களின் தாயார் உம்மு ஸுலைம் (ரலி) இவருடைய 10வது வயதில் நபிகளருக்குப் பணிவிடை செய்ய அமர்த்தினார்கள். நபி (ஸல்) அவர்கள் அனஸ் (ரலி) அவர்களுடைய ஆயுளை நீடித்து அதில் பரகத் செய்ய வேண்டுமென அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். அதன் காரணமாக அவர்கள் நீண்டகாலம் வாழ்ந்து நிறைய செல்வங்களும் குழந்தைகளும் அவர்களுக்குக் கிடைத்தன. நபிகளாரைத் தொட்டும் 2286 ஹதீஸ்களை அறிவித்தார். தனது 100வது வயதைத் தாண்டிய பின்னர் ஹிஜ்ரி 93ம் ஆண்டு பஸ்ராவில் காலமானார். நபித்தோழர்களில் இவர்களே கடைசியாக மரணித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## சாராம்சம்

இந்த ஹதீஸில் ஒரு சுவையான அம்சத்தைக் கொண்டு ஈமானில் முஸ்லிமுடைய ஆசையை ஒப்பிடப்பட்டுள்ளது. அதனால் அவனுக்கு கிடைக்கும் பலனும் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும் இந்த ஹதீஸ் ஒரு நோயாளிக்கும், ஆரோக்கியமானவனுக்கும் மத்தியில் ஒப்பிடுகிறது ஏனெனில் மஞ்சக் காமாலைப் பிடித்தவன் தேனைக் கூட கசப்பாகவே பெற்றுக் கொள்வான். ஆனால் ஆரோக்கியமுடையவன் அதன் சுவையை அப்படியே பெற்றுக் கொள்வான். ஆரோக்கியம் குறையக் குறைய சுவையும் அதே அளவு குறைகிறது. இன்னும் இங்கு சுவை என்று சொல்லப்பட்ட காரணம் அல்லாஹ் பின்வரும் வசனத்தில் ஈமானை மரத்திற்கு ஒப்பிடுகிறான்.

﴿ أَلَمْ تَرَ كَيْفَ ضَرَبَ ٱللَّهُ مَثَلًا كَلِمَةً طَيِّبَةً كَشَجَرَةٍ طَيِّبَةٍ ﴾ إبراهيم: ٢٤

நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு உதாரணத்தைக் கூறியுள்ளான் என்பதை (நபியே) நீர் பார்க்கவில்லையா? அது நல்ல மரத்தைப் போன்றதாகும். (இப்ராஹீம் : 24) அந்தச் சொல் தூய்மையின் சொல்லாகும் மரம் ஈமானின் அடிப்படையாகும். அந்த மரத்தின் கிளைகள் மார்க்கத்தின் ஏவல்களும், தடைகளுமாகும். மரத்தின் இலைகள் ஒரு மு.்.மின் நாடும் நல்லவைகளாகும். மரத்தின் கனிகள் நல்ல அமல்களாகும் இறுதியில் அந்த மரத்தில் சிறந்த பலனைப் பெறலாம்.

### படிப்பினை

1. அனைத்துப் படைப்பை விடவும் அல்லாஹ்வையும், அவனது தூதர் (ஸல்) அவர்களையும் நேசம் கொள்வதை முற்படுத்துவது கடமையாகும்.
2. அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதர் (ஸல்) அவர்களுக்கும் மாறு செய்வதில் மக்களை வழிப்படாதிருத்தல்.
3. அல்லாஹ் ஒருவனுக்காகவே தன் சகோதர முஸ்லிமை நேசம் கொள்வது பரிபூரணமான ஈமானில் உள்ளதாகும்.
4. தான் நரகத்தில் தள்ளப்படுவதை வெறுப்பதைப் போன்று குப்ரை வெறுப்பது முஸ்லிமின் மீதுள்ள கடமையாகும்.
5. யார் இந்தப் பண்புகளைக் கண்டு கொள்கிறாரோ அவர் தன் உள்ளத்திலே அமைதியையும், தன் ஆத்மாவில் சாந்தியையும் கண்டு கொள்கிறார்.

# அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்

بسم الله الرحمن الرحيم

# ஃபிக்ஹு

# 2

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம் அஹ்மத் (அப்பாஸி)

# فقه

(اللغة التاملية)

ترجمة: محمد عمران بن جمال الدين
مراجعة : أحمد بن محمد

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

بسم الله الرحمن الرحيم

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | இயற்கை மரபுகள் | 45 நிமிடங்கள் |
| 2 | மலசலங் கழிப்பதன் ஒழுங்கு முறை | 45 நிமிடங்கள் |
| 3 | தயம்மும் | 45 நிமிடங்கள் |
| 4 | அதானும் இகாமத்தும் தொழுகையில் முன்னால் வைக்கும் தடுப்பும் | 45 நிமிடங்கள் |
| 5 | கூட்டுத் தொழுகை | 45 நிமிடங்கள் |
| 6 | மறதிக்கான ஸுஜூது | 45 நிமிடங்கள் |
| 7 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 8 | ஜும்ஆத் தொழுகை | 45 நிமிடங்கள் |
| 9 | பெருநாள்த் தொழுகை | 45 நிமிடங்கள் |
| 10 | ஜனாஸாவின் சட்டங்கள்- குளிப்பாட்டலும் அடக்கஞ் செய்தல் | 45 நிமிடங்கள் |
| 11 | ஜனாஸாத் தொழுகை முறை | 45 நிமிடங்கள் |
| 12 | ஸுன்னத்தான தொழுகைகள் (1) | 45 நிமிடங்கள் |
| 13 | ஸுன்னத்தான தொழுகைகள் (2) | 45 நிமிடங்கள் |
| 14 | தொழுகை தடுக்கப்பட்ட நேரங்களும் நோயாளியின் தொழுகை முறையும் | 45 நிமிடங்கள் |
| 15 | பிரயாணத் தொழுகை | 45 நிமிடங்கள் |

# இயற்கை மரபுகள்

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ : قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ : "عَشْرٌ مِنَ الْفِطْرَةِ : قَصُّ الشَّارِبِ وَإِعْفَاءُ اللِّحْيَةِ وَالسِّوَاكُ وَاسْتِنْشَاقُ الْمَاءِ وَقَصُّ الْأَظْفَارِ وَغَسْلُ الْبَرَاجِمِ وَنَتْفُ الْإِبْطِ وَحَلْقُ الْعَانَةِ وَانْتِقَاصُ الْمَاءِ قَالَ زَكَرِيَّا: قَالَ مُصْعَبٌ: وَنَسِيْتُ الْعَاشِرَةَ إِلَّا أَنْ تَكُوْنَ الْمَضْمَضَةَ" رواه مسلم.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : பத்து விடயங்கள் இயற்கை மரபுகளில் அடங்கும். (அவையாவன:) மீசையைக் கத்தரிப்பது, தாடியை வளர்ப்பது, பல் துலக்குவது, நாசிக்கு நீர் செலுத்துவது, நகங்களை வெட்டுவது, விரல் கணுக்களைக் கழுவுவது, அக்குள் முடிகளை அகற்றுவது, மர்ம உறுப்பின் முடிகளை மழிப்பது, (மல ஜலம் கழித்த பின்) தண்ணீரால் துப்பரவு செய்வது.
அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி).
ஆதாரம் : முஸ்லிம் 261.
(இதன் அறிவிப்பாளர் வரிசையில் இடம்பெறும்) ஸகரிய்யா பின் அபீ ஸாஇதா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள் : (இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) முஸ்அப் பின் ஷைபா (ரஹ்) அவர்கள், பத்தாவது விடயத்தை நான் மறந்து விட்டேன். அது வாய் கொப்பளிப்பதாய் இருக்கலாம் என்று கூறினார்கள்.
மேற்கூறப்பட்ட நபிமொழியின் அடிப்படையில் பின்வருவன இயற்கை மரபுகளில் அடங்கும், அவற்றை கண்காணித்து செயற்படுவது நபிவழியாகும்.

1. பல் துலக்குதல்.
2. அக்குள் முடிகளை அகற்றுவது, மர்ம உறுப்பின் முடிகளை மழிப்பது.
3. கத்னாச் செய்வது. (இது மேற்கூறப்பட்ட நபிமொழியில் இடம்பெறாவிட்டாலும் வேறு நபிமொழிகளில் கூறப்பட்டுள்ளது.)
4. மீசையைக் கத்தரிப்பது, தாடியை வளர்ப்பது.
5. நகங்களை வெட்டுவது.
6. பொதுவான சுத்தங்கள்.

# மலஜலம் கழிப்பதின் ஒழுங்கு முறை

1-நுழைவதற்கு முன் துஆ ஓதல் اللهم إني أعوذبك من الخبث والخبائث
2-இடது காலை வைத்து நுழைதல்
3-மறைவான ஓர் இடத்தைத் தெரிவு செய்து கொள்ளல்
4-கிப்லாவை முன்னோக்காதிருத்தல்
5-இடது காலை நட்டி அதில் உட்கார வேண்டும்.
6-சிறு நீர் தெளிக்காமல் கவனித்துக் கொள்ளல்
7-பேச்சை தவிர்ந்து கொள்ளல்
8-தடுக்கப்பட்ட இடங்களை தவிர்ந்து கொள்ளல் (பொது இடங்கள், மக்கள் நடமாடும் பாதைகள், ஓய்வெடுக்கும் மர நிழல்கள்)
**9-சுத்தம் செய்வதன் முறை:**
*இடது கரத்தைப் பாவித்தல்
*தண்ணீரைக் கொண்டு அசுத்தத்தை நீக்கல் (அல்லது காய்ந்த கற்கள்)
10-வெளிவரும் போது வலது காலை முற்படுத்தி غفرانك என்ற துஆவை ஓதிக் கொள்ளல்.

# தயம்மம்

தயம்மும் என்பது : முகத்தையும் இரண்டு கரங்களையும் தூய மண்ணால் தடவுதல். இறைவன் கூறுகிறான் :

﴿ وَإِن كُنتُم جُنُبًا فَاطَّهَّرُواْ وَإِن كُنتُم مَّرْضَىٰٓ أَوْ عَلَىٰ سَفَرٍ أَوْ جَآءَ أَحَدٌ مِّنكُم مِّنَ ٱلْغَآئِطِ أَوْ لَٰمَسْتُمُ ٱلنِّسَآءَ فَلَمْ تَجِدُواْ مَآءً فَتَيَمَّمُواْ صَعِيدًا طَيِّبًا فَٱمْسَحُواْ بِوُجُوهِكُمْ وَأَيْدِيكُم مِّنْهُ مَا يُرِيدُ ٱللَّهُ لِيَجْعَلَ عَلَيْكُم مِّنْ حَرَجٍ وَلَٰكِن يُرِيدُ لِيُطَهِّرَكُمْ وَلِيُتِمَّ نِعْمَتَهُۥ عَلَيْكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُونَ ﴾ المائدة: ٦

இன்னும் நீங்கள் நோயாளிகளாகவோ அல்லது பிரயாணத்திலோ இருந்தால், அல்லது உங்களில் எவரும் மலஜலம் கழிக்கச் சென்று வந்திருந்தாலும் அல்லது நீங்கள் பெண்களை (உடலுறவின் மூலம்) தீண்டியிருந்தாலும் அப்பொழுது (சுத்தம் செய்து கொள்ள) தண்ணீரை நீங்கள் பெறாவிடில், பரிசுத்தமான மண்ணை நாடுங்கள், பின்னர் அதிலிருந்து உங்களுடைய முகங்களையும், உங்களது கைகளையும் தடவி (தயம்மம்) செய்து கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நெருக்கடியைத் தர நாடவில்லை எனினும், நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்துவதற்காக அவன் உங்களை பரிசுத்தமாக்கி வைக்கவும் தன் அருட்கொடையை உங்கள் மீது பூரணமாக்கி வைக்கவுமே நாடுகிறான். (அல் மாஇதா : 06)

### தயம்மும் எபபோது ஆகுமாகும்?

1-தண்ணீர் இல்லாத நிலையில்
2-தண்ணீர் இருக்கிறது ஆனால் குடிப்பதற்கு அது தேவையாக உள்ளது.
3-தண்ணீர் பாவிப்பதால் மனிதனுக்கு தீங்கு ஏற்படுதல். (உடம்பில் பெரிய காயம் இருத்தல் அல்லது கடினமாக நோய் பீடித்திருத்தல்.)
4-தண்ணீர் கடும் குளிராக இருப்பதுடன் அதனைத் தாங்கும் சக்தியற்றிருத்தல்.

குறிப்பு: கடமையான குளிப்பு, வுழூ ஆகிய இரண்டிற்குப் பகரமாகவும் தயம்மும் செய்யலாம்.

### தயம்மும் செய்வதன் முறை

1-சுத்தமான மண்ணைப் பாவித்தல் (மண், புழுதி, கற்கள்)
2-சுத்தம் செய்வதை மனதில் எண்ணல்.
3-பிஸ்மில்லா சொல்லுதல்.
4-அம்மார் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், எனக்கு குளிப்புக் கடைமையாகியது. தண்ணீர் கிடைக்கவில்லை. மண்ணில் புரண்டு விட்டு தொழுதேன். பின்பு நபி (ஸல்) அவர்களுக்கு இது எத்திவைக்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் தம் இரு உள்ளங்கைகளையும் தரையில் அடித்து அதில் வாயால் ஊதி விட்டு அந்தக் கைகளை முகத்திலும், மணிக்கட்டு வரை இரு கைகளிலும் தடவி விட்டு இவ்வாறு செய்வது உமக்குப் போதுமானது என்று கூறினார்கள் (ஆதாரம் முஸ்லிம் 368)
**குறிப்பு** : மணிக்கட்டு வரை இடது கையால் வலது கையை தடவ வேண்டும், பின் வலது கையால் இடது கையைத் தடவ வேண்டும்.
5-பூமியில் அதிகமான புழுதி இருந்தால் கையில் ஊதிக் கொள்வது சுன்னத்தாகும்.

### தயம்முமை முறிக்கும் காரியங்கள்

வுளுவையும், குளிப்பையும் முறிக்கும் காரியங்கள் அனைத்தும் தயம்மத்தை முறிக்கும். தண்ணீர் கிடைத்து அதை உபயோகிக்க சக்தி பெற்றாலும் தயம்மம் முறிந்து விடும்.

# அதானும் இகாமத்தும்

(பர்ளு தொழுகைக்கான அழைப்பு)

**அதான் கூறுவதன் சிறப்பு :**

قال رسول الله صلى الله عليه وسلم: فَإِنَّهُ لَا يَسْمَعُ مَدَى صَوْتِ الْمُؤَذِّنِ جِنٌّ وَلَا إِنْسٌ وَلَا شَيْءٌ إِلَّا شَهِدَ لَهُ يَوْمَ الْقِيَامَةِ. (رواه البخاري)

அதான் கூறப்படும் சப்தத்தை கேட்கக் கூடிய ஜின்கள், மனிதர்கள் மற்றவை அனைத்தும் மறுமை நாளில் சாட்சி சொல்லுமென நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.(அறிவிப்பவர் : அபூ ஸஈத் அல் குத்ரீ (ரலி), ஆதாரம் புஹாரி 609)

**அதான் கூறும் முறை :**

1. اللهُ أَكْبَرُ – اللهُ أَكْبَرُ
2. اللهُ أَكْبَرُ – اللهُ أَكْبَرُ
3. أَشْهَدُ أَنْ لَاإِلهَ إِلَّا اللهُ – أَشْهَدُ أَنْ لَاإِلهَ إِلَّا اللهُ
4. أَشْهَدُ أَنَّ مُحَمَّداً رَسُوْلُ اللهِ – أَشْهَدُ أَنَّ مُحَمَّداً رَسُوْلُ اللهِ
5. حَيَّ عَلَى الصَّلَاةِ – حَيَّ عَلَى الصَّلَاةِ
6. حَيَّ عَلَى الْفَلَاحِ – حَيَّ عَلَى الْفَلَاحِ
7. اللهُ أَكْبَرُ – اللهُ أَكْبَرُ
8. لَا إِلَهَ إِلَّا اللهُ.

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ்
அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ்
அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்
அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்
ஹய்ய அலஸ்ஸலாஹ் ஹய்ய அலஸ்ஸலாஹ்
ஹய்ய அலல் பலாஹ் ஹய்ய அலல் பலாஹ்
அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
லாஇலாஹ இல்லல்லாஹ்.

பொருள்:

அல்லாஹு அக்பர் : அல்லாஹ் மிகப் பெரியவன்.
அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் சாட்சி பகர்கிறேன்.
அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ் : முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகிறேன்.
ஹய்ய அலஸ்ஸலாஹ் : தொழுகையின் பால் விரைந்து வாருங்கள்
ஹய்ய அலல் பலாஹ் : வெற்றியின் பால் விரைந்து வாருங்கள்.
லாஇலாஹ இல்லல்லாஹ் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

குறிப்பு:
பஜ்ர் தொழுகையில் حي على الفلاح ஹய்ய அலல்பலாஹ் என்ற வாக்கியத்திற்குப் பிறகு الصلاة خير من النوم الصلاة خير من النوم அஸ்ஸலாத்து கைறும் மினன்னவ்ம் என்று இரண்டு முறை கூறவேண்டும்.
பொருள் : தூக்கத்தை விட தொழுகை மேலானது.

**அதானுக்குப் பதில் கூறல் :**

அதான் கூறக் கேட்டால் முஅத்தின் சொல்வதைப் போன்று சொல்வது சிறந்ததாகும். حي على الفلاح حي على الصلاة ஹய்யஅலஸ்ஸலாஹ், ஹய்யஅலல்பலாஹ் என்ற வார்த்தைகளைக் கேட்டால் لا حول ولا قوة إلا بالله. லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ் என்று சொல்ல வேண்டும்.
பொருள் : நன்மை செய்வதற்குரிய சக்தியோ, பாவத்தை விட்டும் திரும்புதலோ அல்லாஹ்வைக் கொண்டே இல்லாமல் நடைபெறாது.

**அதானுக்குப் பின்னால் துஆ ஓதல்**

اللَّهُمَّ رَبَّ هَذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدًا الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَحْمُودًا الَّذِي وَعَدْتَهُ

அல்லாஹும்ம றப்ப ஹாதிஹித் த.்.வதித் தாம்மஹ், வஸ்ஸலாதில் காஇமஹ், ஆதி முஹம்மதன் அல்வஸீலத வல் பளீழா, வப்அஸ்ஹு மகாமன் மஹ்மூதன் அல்லதி வஅத்தஹு.

பொருள்: முழுமையான இந்த அழைப்புக்குச் சொந்தக்காரனே. நிலையான தொழுகைக்கும் உரியவனே முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு வஸீலா எனும் பதவியையும், சிறப்பையும் வழங்குவாயாக. இன்னும் நீ அவர்களுக்கு வாக்களித்த புகழுக்குரிய அந்தஸ்தில் (இடத்தில்) அவர்களை நீ எழுப்புவாயாக.

عن جابر رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال: من قال حين يسمع النداء اللهم رب هذه الدعوة التامة والصلاة القائمة آت محمدا الوسيلة والفضيلة وابعثه مقاماً محموداً الذي وعدته. حلت له شفاعتي يوم القيامة. (رواه البخاري)

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்: யார் அதான் முடிந்ததும் (மேல் குறிப்பிட்ட) துஆவை ஓதுகிறாரோ அவருக்கு எனது பரிந்துரை அவசியமாகி விட்டது. ஜாபிர் (ரலி) அறிவிக்கும் இந்த ஹதீஸ் புஹாரியில் (614) இடம் பெற்றுள்ளது.

عن أنس رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال: "الدعاء لا يرد بين الأذان والإقامة " (رواه أبو داود والترمذي)

அதானுக்கும் இகாமத்திற்கும் மத்தியில் கேட்கும் பிராத்தனை நிராகரிக்கப்படமாட்டாது என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள். அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸ் அபூ தாவுத் (521), திர்மிதி (212) போன்ற கிரந்தங்களில் இடம் பெற்றுள்ளது.

**இகாமத் கூறும் முறை :**

1. اللهُ أَكْبَرُ – اللهُ أَكْبَرُ
2. أَشْهَدُ أَنْ لَاإِلَهَ إِلَّا اللهُ
3. أَشْهَدُ أَنَّ مُحَمَّداً رَسُوْلُ اللهِ
4. حَيَّ عَلَى الصَّلَاةِ
5. حَيَّ عَلَى الْفَلَاحِ
6. قَدْ قَامَتِ الصَّلَاةُ – قَدْ قَامَتِ الصّلَاةُ

7. اللهُ أَكْبَرُ – اللهُ أَكْبَرُ

8. لَا إِلَهَ إِلَّا اللهُ

1-அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்
2-அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ்
3-அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ்
4-ஹய்ய அலஸ் ஸலாஹ்
5-ஹய்ய அலல் பலாஹ்.
6-கத் காமதிஸ் ஸலாஹ், கத் காமதிஸ் ஸலாஹ்
7-அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்
8-லாஇலாஹ இல்லல்லாஹ்.

பொருள்:
1-அல்லாஹ் மிகப் பெரியவன் அல்லாஹ் மிகப் பெரியவன்
2-வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் சாட்சி பகர்கிறேன்.
3-முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி பகர்கிறேன்.
4-தொழுகையின் பால் வாருங்கள்.
5-வெற்றியின் பால் வாருங்கள்.
6-தொழுகை ஆரம்பமாகி விட்டது. தொழுகை ஆரம்பமாகி விட்டது
7-அல்லாஹ் மிகப் பெரியவன். அல்லாஹ் மிகப் பெரியவன்
8-வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

## அஸ்ஸுத்ரா

ஸுத்ரா என்பது : தடுப்பைக் குறிக்கும்.
1. பிக்ஹுக் கலையில் ஸுத்ரா என்பது :தொழுபவருக்கு முன்னால் நட்டப்படும் ஏதாவது ஒரு பொருளாகும்.
2. அதனுடைய உயரம் ஒரு முழமாக இருப்பது சிறந்ததாகும்.
3. இமாமுக்கு வைக்கும் ஸுத்ரா மஃமூன்களுக்கும் போதுமானது.

குறிப்பு:
தொழுபவருக்கு முன்னால் நடப்பது (மாறுவது) தடுக்கப்பட்டதாகும். தொழுபவர் அவரை தடுப்பது கட்டாயமாகும்.

# கூட்டுத் தொழுகை

**கூட்டுத் தொழுகையின் முக்கியத்துவம் :**

இறைவன் கூறுகிறான் :

﴿ وَإِذَا كُنتَ فِيهِمْ فَأَقَمْتَ لَهُمُ ٱلصَّلَوٰةَ فَلْتَقُمْ طَآئِفَةٌ مِّنْهُم مَّعَكَ وَلْيَأْخُذُوٓاْ أَسْلِحَتَهُمْ فَإِذَا سَجَدُواْ فَلْيَكُونُواْ مِن وَرَآئِكُمْ وَلْتَأْتِ طَآئِفَةٌ أُخْرَىٰ لَمْ يُصَلُّواْ فَلْيُصَلُّواْ مَعَكَ وَلْيَأْخُذُواْ حِذْرَهُمْ وَأَسْلِحَتَهُمْ ﴾ النساء: ١٠٢

(நபியே! போர் முனையில்) அவர்களுடன் நீர் இருந்து, அவர்களுக்கு தொழவைக்க நீர் (இமாமாக) நின்றால் அவர்களில் ஒரு பிரிவினர் தம் ஆயுதங்களைத் தாங்கிக் கொண்டு உம்முடன் தொழட்டும். அவர்கள் உம்முடன் ஸஜ்தா செய்து (தொழுகையை முடித்ததும்) அவர்கள் (விலகிச் சென்று) உங்கள் பின்புறம் (உங்களைக் காத்து நிற்கட்டும்) அப்பொழுது, தொழாமலிருந்த மற்றொரு பிரிவினர் வந்து உம்முடன் தொழட்டும். ஆயினும் அவர்களும் தங்கள் ஆயுதங்களைத் தாங்கிய வண்ணம், தங்களைப் பற்றி எச்சரிக்கையாக இருக்கட்டும். (அந்நிஸா : 102)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஸுப்ஹு, இஷா ஆகிய தொழுகைகளை விட முனா∴பிக் (வேடதாரி)களுக்குப் பாரமான தொழுகை வேறு எதுவும் இல்லை. அந்த இரண்டு தொழுகைகளையும் (ஜமாஅத்தாகத்) தொழுவதிலுள்ள நன்மையை மக்கள் அறிவார்களானால் தவழ்ந்தாவது அத்தொழுகைக்கு வந்து சேர்ந்து விடுவார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி 657, முஸ்லிம் 651.

**இமாமத் செய்யத் தகுதியானவர் :**

1. அல்குர்ஆனை சிறந்த முறையில் ஓதக்கூடியவர்.
2. ஹதீஸ்களை அதிகம் அறிந்து வைத்திருப்பவர்.
3. முதலில் ஹிஜ்ரத் செய்தவர்.
4. வயதில் பெரியவர்.

**இமாம் நிற்க வேண்டிய இடம் :**

- கிப்லாவை முன்னோக்கி முன்னால் நிற்பார்.
- பின்பற்றித் தொழுபவர்கள் (ம∴மூம்கள்) இமாமுக்குப் பின்னால் அணிவகுத்து நிற்பர்.

குறிப்பு :

- ஆரம்ப வரிகள் கடைசி வரிகளை விட சிறந்தது.
- ஓர் அணியின் வலது பக்கம் இடது பக்கத்தை விட சிறந்தது.
- இமாமுக்கு சமீபத்தில் நிற்பது தூர நிற்பதை விட சிறந்தது.

**பின்பற்றித் தொழுபவருடன் தொடர்புடைய சில சட்டங்கள் :**

- பின்பற்றித் தொழுபவர் ஒரு போதும் இமாமை முந்தக்கூடாது. (இமாம் ருகூ∴ செய்யாமல் ருகூ∴ செய்யக் கூடாது, இமாம் ஸுஜூது செய்யாமல் ஸுஜூது செய்யக் கூடாது.)
- இமாம் ருகூ∴விலிருந்து எழுமுன் ம∴மூம் தொழுகையில் சேர்ந்தால் அந்த ரக்அத்தை அடைந்தவராகக் கருதப்படுவார். அவ்வாறில்லாத பட்சத்தில் அடுத்த ரக்அத்துக்காக இமாம் எழும்வரை காத்திருக்கத் தேவையில்லை. இமாம் எந்த நிலையில் இருக்கின்றாரோ அதில் போய் சேர்ந்து கொள்ள வேண்டும். அது ருகூ∴ அல்லது அதற்கு முன் என்றால் அந்த ரக்அத் கணிக்கப்படும். இல்லாவிடில் கணிக்கப்படமாட்டாது.

# ஸஜ்தா ஸஹ்வு

தொழுகையில் மறதி காரணமாக அதிகமாக அல்லது குறைவாக ஏதும் ஏற்பட்டு விடுமானால், அல்லது சந்தேகம் ஏற்படுமானால் அதற்கு பரிகாரமாக இறுதியில் இரண்டு ஸஜ்தாக்கள் செய்வதை ''ஸஜ்தா ஸஹ்வு'' எனப்படும்.

**ஸஜ்தா ஸஹ்வின் முறை**

عن ابن مسعود رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال: إذا زاد الرجل أو نقص فليسجد سجدتين. (رواه مسلم)

ஒருவர் தொழுகையில் ஏதாவது அதிகமாக செய்தால் அல்லது குறை ஏற்பட்டால் அவர் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும் என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். இப்னு மஸ்ஊத் அறிவிக்கும் இந்த ஹதீஸ் முஸ்லிமில் (572) இடம் பெற்றுள்ளது.
**குறிப்பு** : தொழுகையில் ஏற்படும் தவறைப் பொறுத்து ஸலாம் கொடுப்பதற்கு முன் அல்லது பின் இரண்டு ஸஜ்தாவையும் செய்யலாம்.

**எப்போது ஸஜ்தா ஸஹ்வு கடமையாகும்?**

1. ஒருவருக்கு மறதி ஏற்பட்டு அதிகமாக ஏதாவது ஒரு செயலைச் செய்தால் ஸஜ்தா செய்வது கடமையாகும்.
**உதாரணம்**: ஒருவர் லுஹர் தொழுது ஐந்தாவது ரக்ஆதுக்கும் எழுந்து விடுகிறார். பின்பு உடனே ஞாபகம் வருகிறது. அவர் உடனே உட்கார்ந்து இறுதி தஷஹ்ஹுதை ஓதி விட்டு பின்பு இரண்டு ஸஜ்தா செய்து ஸலாம் கொடுக்க வேண்டும்.
**குறிப்பு** : தொழுகை பூரணமாக முடிந்த பின் ஞாபகம் வந்தால் அவர் இரண்டு ஸஜ்தா செய்து ஸலாம் கொடுக்கலாம். ஆனால் இரண்டிற்கும் மத்தியில் இடைவேளை அதிகமாக இருக்கக் கூடாது.

2. தொழுகையில் முக்கியமான ஒரு ருக்னை மறதியாக விட்டு விட்டால் மீண்டும் அவர் அதை நிறைவேற்றுவது கடமையாகும்.
**உதாரணம்**: லுஹர் தொழும் ஒருவர் மூன்று ரக்ஆத்துடன் உட்கார்ந்தால், அவர் மீண்டும் எழுந்து தொழுகையை பூரணப்படுத்துவார். பின்பு தஷஹ்ஹுத் ஓதியதன் பின்னால் ஸலாம் கொடுத்துவிட்டு ஸஜ்தா செய்வார். அதே போன்று ஏதாவது ஒரு ரக்அத்தில் ஒரு ஸுஜூது மாத்திரம் செய்தால் அந்த ரக்அத் கணிக்கப்பட மாட்டாது. அதனை இறுதியில் பூரணப்படுத்திவிட்டு தஷஹ்ஹுத் ஓதியதன் பின்னால் ஸலாம் கொடுத்துவிட்டு ஸஜ்தா செய்வார்.
**குறிப்பு** : தொழுகை முடிந்ததன் பின் மூன்று ரக்அத்கள்தான் தொழுதோம் என்று ஞாபகம் வந்தால் நீண்ட நேரமாகாவிட்டால் நான்காவது ரக்அத்துக்காக எழுந்து பூரணப்படுத்துவார். ஸலாம் கொடுத்து விட்டு இரு ஸஜ்தாக்கள் செய்து மீண்டும் ஸலாம் கொடுப்பார்.

3. வாஜிபான ஒரு செயலை மறந்தால் அதை மீண்டும் செய்ய வேண்டியதில்லை.
**உதாரணம்**: லுஹர் தொழும் ஒருவர் முதலாவது (தஷஹ்ஹுத்) ஓதாமல் மூன்றாவது ரக்ஆத்துக்கு எழுந்து விட்டார். அதன் பின்தான் ஞாபகம் வருகிறது. இந்த நிலையில் அவர் மீண்டும் அதைச் செய்வது கட்டாயமில்லை என்றாலும் அவர் ஸஜ்தா செய்து பின்பு ஸலாம் கொடுக்க வேண்டும்.
**குறிப்பு** : பூரணமாக நிலைக்கு வருமுன் ஞாபகம் வந்தால் அவர் உடனே உட்கார்ந்து தஷஹ்துத் ஓதலாம் பின்பு தொழுகையை பூரணப்படுத்தி விட்டு ஸஜ்தா செய்து ஸலாம் கொடுப்பது கட்டாயமாகும்.

4. ரக்ஆத்தின் எண்ணிக்கையில் சந்தேகம் ஏற்பட்டால், குறைந்த எண்ணிக்கையில் உறுதி கொள்ள வேண்டும்.

**உதாரணம்** : லுஹர் தொழுது கொண்டிருக்கும் ஒருவருக்கு மூன்றாவது ரக்ஆத்தில் சந்தேகம் வருகிறது மூன்றா நான்கா என்று, அவர் குறைந்த எண்ணிக்கையில் அதாவது மூன்று என உறுதி கொள்ள வேண்டும். அதன் பின்னால் நான்காவதைப் பூர்த்தி செய்து விட்டு தஷஹ்ஹுத் ஓதி ஸஜ்தா செய்து ஸலாம் கொடுக்க வேண்டும்.

**குறிப்பு** : கூட்டமாக தொழும் போது இமாம் ஏதாவது ஒன்றை மறந்து விட்டால் சுப்ஹானல்லாஹ் (**سبحان الله**) என்று சொல்லி ஞாபகப் படுத்த வேண்டும்.

# ஜும்ஆ தொழுகை

﴿ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِذَا نُودِىَ لِلصَّلَوٰةِ مِن يَوۡمِ ٱلۡجُمُعَةِ فَٱسۡعَوۡاْ إِلَىٰ ذِكۡرِ ٱللَّهِ وَذَرُواْ ٱلۡبَيۡعَۚ ذَٰلِكُمۡ خَيۡرٞ لَّكُمۡ إِن كُنتُمۡ تَعۡلَمُونَ ﴾ الجمعة: ٩

விசுவாசங் கொண்டோரே (வெள்ளிக் கிழமையாகிய) ஜும்ஆ தினத்தன்று தொழுகைக்காக (பாங்கு சொல்லி நீங்கள்) அழைக்கப்பட்டால், அப்போது அல்லாஹ்வை நினைவு கூறுவதன்பால் நீங்கள் சென்று விடுங்கள், வர்த்தகத்தையும் விட்டுவிடுங்கள். நீங்கள் அறிவுடையோராக இருந்தால், இதுவே உங்களுக்கு மிகச்சிறந்ததாகும். (அல் ஜும்ஆ : 9)

**ஜும்ஆவின் சிறப்பு**

عن أبي هريرة رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم فال: خير يوم طلعت عليه الشمس يوم الجمعة فيه خلق آدم، وفيه أدخل الجنة وفيه أخرج منها ولا تقوم الساعة إلا في يوم الجمعة. (رواه مسلم)

சூரியன் உதிக்கும் நாட்களில் சிறந்த நாள் வெள்ளிக் கிழமையாகும். அந்த நாளில் தான் ஆதம் நபி படைக்கப்பட்டார்கள். அதே நாளில் சுவரக்கத்தில் நுழைவிக்கப்பட்டார்கள். அதே நாளில் சுவர்க்கத்தில் இருந்து வெளியேற்றப்பட்டார்கள். மேலும் அந்த வெள்ளிக் கிழமையில் தான் உலக அழிவு நாளும் ஏற்படும் என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கும் இந்த ஹதீஸ் முஸ்லிமில் (854) பதிவாகியுள்ளது.

**ஜும்ஆ தொழுகையின் நிபந்தனைகள்** :

1.**நேரம்:** லுஹர் தொழும் நேரம்.

2.**எண்ணிக்கை:** இமாமுடன் சேர்த்து குறைந்தது மூன்று பேர் இருக்க வேண்டும்.

3.**இரண்டு குத்பாக்கள்:** அல்லாஹ்வைப் புகழ்ந்து, நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்லி அல்லாஹ்வை நினைவு படுத்தி முஸ்லிம் சமூகத்தின் தேவையான செய்திகளை சுருக்கமாகச் சொல்ல வேண்டும்.

4.**தொழுகை:** இரண்டு ரக்ஆதுகள். இரண்டிலும் சப்தமிட்டு ஓத வேண்டும்.

**குறிப்பு**

இமாம் இரண்டாவது ரக்அத்தின் ருகூ.:.விலிருந்து எழுந்த பின் ஒருவர் தொழுகையில் சேர்ந்தால் அவர் இரண்டு ரக்ஆதுகளையும் இழந்து விட்டதாகக் கருதப்படுவார், அவர் லுஹர் தொழுகையை நான்கு ரக்ஆதுகள் தொழுவார்.

**சுன்னத் தொழுகை**: ஜும்ஆத் தொழுகைக்குப் பின் பள்ளியில் தொழுவதானால் நான்காகவும், வீட்டில் தொழுவதானால் இரண்டாகவும் தொழுவார்.

**தவிர்ந்து கொள்ள வேண்டிய அம்சங்கள்**
1-பிரசங்கம் நடக்கும் போது மௌனமாக இருத்தல்.
2-தேவையில்லாத விடயங்களை தவிர்ந்து கொள்ளல்.
3-உட்காந்திருக்கும் மனிதர்களின் தோள்களை தாண்டிச் செல்லாதிருத்தல்.

**வெள்ளிக்கிழமை தினத்தில் விரும்பத்தக்கவைகள் :**
1. குளித்தலும், சிறந்த ஆடைகளை அணிதலும்.
2. நேர காலத்துடன் பள்ளிக்குச் செல்லுதல்.
3. நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லல்.
4. ஸுரதுல் கஹ்ப் ஓதல்.
5. வெள்ளிக் கிழமை இறுதி நேரத்தில் துஆச் செய்தல்.

**குறிப்பு:** தொழுகையின் இரண்டு ரக்அத்களிலும் முறையே ஸுரதுல் அ.்.லாவும், ஸுரதுல் காஷியாவும் ஓதுவது ஸுன்னத்தாகும்.

# பெருநாள் தொழுகை

முஸ்லிம்களின் பெருநாள் தினங்கள் இரண்டு :
1. ஈதுல் பித்ர் நோன்புப் பொருநாள் : இது ஷவ்வால் மாத முதல் நாள் கொண்டாடப்படும்.
2. ஈதுல் அழ்ஹா ஹஜ்ஜுப் பெருநாள் : இது துல்ஹஜ் மாத பத்தாவது நாள் கொண்டாடப்படும்.

**ஈத் என்பதன் விளக்கம்** : அல் ஈத் என்றால் பரிபாசையில் மீண்டும் மீண்டும் வருவதைக் குறிக்கும். மேலும் அந்நாளில் அனைத்து முஸ்லிம்களில் தத்தமது பிரதேசங்களில் ஒன்று கூடுகின்றனர். அது ஒரு மகிழ்ச்சிக்குரிய தினமாகும். பெருநாள் தினங்கள்: உண்ணல், பருகல், அல்லாஹ்வை நினைவு கூறல் போன்றவைகள் செய்யும் நாட்களாகும்.

**பெருநாள் தொழுகையின் நிபந்தனைகள் :**
1. **நேரம்**: சூரியன் உதித்து 40 நிமிடங்களாகும். (பஜ்ர் அதானிலிருந்து 2 மணி நேரத்திக்குப் பின்)
2. **தொழுகை:** இரண்டு ரக்ஆதுகள். இரண்டிலும் சப்தமாக ஓதப்பட வேண்டும். மேலும் அதான், இகாமத் இன்றி நிறைவேற்றப்படும். முதல் ரக்ஆதில் தக்பீரதுல் இஹ்ராமை தவிர்ந்து ஆறு தக்பீர்களும், இரண்டாவது ரக்ஆதில் நிலைக்கு வரும் தக்பீரைத் தவிர்ந்து ஐந்து தக்பீர்களும் சொல்லப்படும்.
3. **இரண்டு குத்பாக்கள்**: (பிரசங்கம்) தொழுகைக்குப் பின் நிறைவேற்றப்படும்.

**பெருநாள் தினத்தில் செய்ய வேண்டிய விரும்பத்தக்க செயல்கள்**
1. குளித்தல், சிறந்த ஆடைகளை அணிதல்.
2. நோன்புப் பெருநாள் தினமன்று சில பேரித்த பழங்களை ஒற்றைப்படையாக சாப்பிட்டு விட்டு தொழுகைக்கு செல்லுதல் சுன்னத்தாகும்.

3. ஊருக்கு வெளியில் திடலில் தொழுவது நபி வழியாகும். மேலும் தொழுகைக்குப் போன வழியில் அல்லாது வேறு வழியில் திரும்பி வருவதும், நடந்து செல்வதும் நபி வழியாகும்.
4. தக்பீர் சொல்வது விரும்பத்தக்கதாகும் :

الله أكبر الله أكبر لا إله إلا الله ، الله أكبر الله أكبر ولله الحمد.

அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் லாஇலாஹ இல்லல்லாஹ், அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் வலில்லாஹில் ஹம்த்.

குறிப்பு : கூட்டாக தக்பீர் சொல்லல் கூடாது.

# ஜனாஸாவின் சட்டங்கள்

**ஒரு ஜனாஸாவுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் :**

**(1) முஸ்லிம் மையித்தின் உடம்பை சுத்தம் செய்தல் (குளிப்பாட்டல்)**
1. ஆண்களை ஆண்களும், பெண்களை பெண்களும் சுத்தம் செய்தல். மேலும் கணவன் மனைவியருள் ஒருவா் மற்றவரைக் குளிப்பாட்ட அனுமதியுண்டு.
2. அவ்ரத்தை விட்டு மற்றைய துணிகளை உடம்பில் இருந்து நீக்குதல் வேண்டும்.
3. வயிற்றில் உள்ள அழுக்குகளை வெளிப்படுத்துவதற்கு முதுகை உயர்த்தி வயிற்றை மெதுவாக நசுக்குதல்.
குறிப்பு : மையித்தை சுத்தம் செய்யும் போது அதிகமாக தண்ணீரைப் பாவித்தல்.
4. சில குறிப்பிட்ட இடங்களை கையுறை அணிந்து அசுத்தங்களை நீக்குதல்
5. மையத்திற்கு வுளு செய்து விட வேண்டும்.
6. கடமையான குளிப்பு குளிப்பது போன்று வலது புறமாக ஆரம்பித்து பின்பு இடது புறமாக கழுவிக் குளிப்பாட்டுதல்.
குறிப்பு : குறைந்தது ஒரு முறையாவது மையத்தை கழுவுதல் கட்டாயமாகும். மூன்று முறை கழுவுதல் சுன்னத்தாகும். கழுவும் போது இளந்தையிலை அல்லது சவக்காரம் போட்டுக் கழுவுவதுடன், கடைசித் தடவை கஸ்தூரி, வாசனைத் திரவியங்கள் போன்றவை போட்டு கழுவுதல் சிறந்ததாகும்.
7. மீசை, நகம், கமக்கட்டு முடி இவைகள் நீண்டதாக இருந்தால் கத்தரிப்பது சிறந்ததாகும்.
8. பெண்களின் முடிகளை மூன்றாக பிரித்து பிண்ண வேண்டும்.

**(2) மையித்தை கபன் செய்தல் :**
1. ஆண் மைய்யித் : மூன்று புடவையாக இருப்பது சிறந்ததாகும்.(சுத்தமாகவும், வெள்ளையாகவும், வாசனை பூசப்பட்டதாகவும் இருக்க வேண்டும்).
2. பெண் மையித்தை கபன் செய்தல் : ஐந்து புடவையாக இருப்பது சிறந்ததாகும்.(சுத்தமாகவும், வெள்ளையாகவும் வாசனை பூசப்பட்டதாகவும் இருக்க வேண்டும்.)
(சாரம், சட்டை, பர்தா, இரண்டு புடவைகள் இருக்க வேண்டும்.)

(3) ஜனாஸா தொழுகை :

ஜனாஸா தொழுகையின் சிறப்பு :

عن أبي هريرة رضي الله عنه قال: قال رسول الله صلى الله عليه وسلم: من شهد الجنازة حتى يصلي عليها فله قيراط ومن شهدها حتى تدفن فله قيراطان" قيل ما القيراط؟ قال: مثل جبل أحد" (متفق عليه)

யார் ஜனாசாவுடன் தொழுகை வரை கலந்து கொள்கிறாரோ அவருக்கு ஒரு கீராத் (நன்மை) உண்டு, இன்னும் யார் அடக்கும் வரை கலந்து கொள்கிறாரோ அவருக்கு இரண்டு கீராத் (நன்மை) உண்டு. கீராத் என்றால் என்னவென்று கேட்கப்பட்ட போது உஹுத் மலையைப் போன்றது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கும் இந்த ஹதீஸ் புஹாரி (1325), முஸ்லிமில் (945) பதிவாகியுள்ளது.

ஜனாஸா தொழுகை :
1.இமாமுக்கும் கிப்லாவுக்கும் மத்தியில் ஜனாஸாவை வைத்தல்
குறிப்பு : ஆண் மையித்தாக இருந்தால் தலைக்கு நேராகவும், பெண் மையித்தாக இருந்தால் மத்தியிலும் இருக்க வேண்டும்.
2. ஆரம்பத் தக்பீர் கட்டியதும் அனைவரும் இரகசியமாக ஸூரதுல் பாதிஹா ஓத வேண்டும்
3. இரண்டாவது தக்பீர் கட்டியதும் நபி (ஸல்) அவர்கள் மீது அனைவரும் இரகசியமாக ஸலவாத்துச் சொல்லல்.
4. மூன்றாவது தக்பீர் கட்டியதும் அனைவரும் இரகசியமாக மையித்துக்காக துஆச் செய்தல்.
உதாரணம்:

"اَللَّهُمَّ اغْفِرْ لَهُ، وَارْحَمْهُ وَعَافِهِ، وَاعْفُ عَنْهُ، وَأَكْرِمْ نُزُلَهُ، وَوَسِّعْ مُدْخَلَهُ، وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ، وَنَقِّهِ مِنْ اَلْخَطَايَا كَمَا نَقَّيْتَ اَلثَّوْبَ اَلْأَبْيَضَ مِنَ الدَّنَسِ، وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ، وَأَهْلًا خَيْرًا مِنْ أَهْلِهِ، وَزَوْجاً خَيْراً مِنْ زَوْجِهِ، وَأَدْخِلْهُ اَلْجَنَّةَ، وَقِهِ فِتْنَةَ اَلْقَبْرِ وَعَذَابَ اَلنَّارِ. (رواه مسلم)

அல்லாஹும்ம.ஃபிர்லஹு வர்ஹம்ஹு, வஆபிஹி வ.ஃபு அன்ஹு, வஅக்ரிம் நுஸுலஹு, வவஸ்ஸி.ஃ. மத்ஹலஹு, வ.ஃஸில்ஹு பில் மாஇ வஸ்ஸல்ஜி வல் பரதி, வனக்கிஹி மினல் கதாயா கமா னக்கைதஸ் ஸவ்பல் அப்யல மினத் தனஸ், வஅப்தில்ஹு தாரன் கைரன் மின் தாரிஹி, வஅஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி, வஸவ்ஜன் கைரன் மின் சவ்ஜிஹி, வஅத்ஹில்ஹுல் ஜன்னத வகிஹி பித்தனதல் கப்ரி வஅதாபன்னார்.

பொருள் : இறைவா! இவருடைய பாவங்களை மன்னித்தருள்வாயாக! இவருக்கு கிருபை செய்வாயாக! இவருக்கு சுகமளிப்பாயாக! இவருடைய பாவங்களை பொறுத்தருள்வாயாக! இவர் தங்கும் தானத்தை சங்கையாக்குவாயாக! இவர் பிரவேசிக்கும் தானத்தை விசாலமாக்குவாயாக! இவரை நீராலும், பனிக்கட்டியாலும், குளிர் நீராலும் கழுவி விடுவாயாக! வெண்ணிற ஆடையை ஊத்தையின்றி நீ சுத்தமாக்கியது போல பாவக்கறைகளை விட்டும் இவரை தூய்மையாக்குவாயாக! இவருடைய இல்லத்தை விடச் சிறந்த இல்லத்தை இவருக்குப் பிரதிபலனாக வழங்குவாயாக! இவருடைய குடும்பத்தை விட சிறந்த குடும்பத்தை இவருக்குப் பிரதிபலனாக வழங்குவாயாக! இவருடைய துணையை விட சிறந்த ஒரு துணையை இவருக்குப் பிரதிபலனாக வழங்குவாயாக! கப்றுடைய துன்பங்கள், நரக வேதனைகளை விட்டும் இவரை அப்புறப்படுத்துவாயாக! (முஸ்லிம் 963)

5. பின்பு நான்காவது தக்பீருக்குப் பின்னால் வலது புறமாக ஸலாம் கொடுத்தல்.

**(4) முஸ்லிமான மையித்தை அடக்கம் செய்தல் :**
1. கப்ர் ஆழமாகவும் விசாலமாகவும் இருத்தல்.
2. லஹத் என்ற அடிப்படையில் கப்ர் இருப்பது சிறந்தது. (அதாவது கிப்லாவின் பக்கமாக கப்ரில் ஒரு பகுதியில் உள் நோக்கித் தோண்டப்பட்டிருத்தல் வேண்டும்)
3. கிப்லாவை முன்னோக்கி வலது புறமாக உடம்பை வைக்க வேண்டும்.
4. உள் நோக்கித் தோண்டப்பட்ட பகுதியை கற்களையும், களிமண்ணையும் வைத்து அடைத்து விட்டு, பின்பு அதன் மீது மணலைப் போட வேண்டும்.
5. பூமியை விட்டும் கொஞ்சம் உயர்ந்ததாக கப்ர் இருக்க வேண்டும்.

# மேலதிகமான தொழுகை

**மேலதிக தொழுகையின் சிறப்பு :**

قال رسول الله صلى الله عليه وسلم في الحديث: أول ما يحاسب به العبد يوم القيامة من عمله الصلاة فإن صلحت فقد أفلح وأنجح وإن فسدت فقد خاب وخسر، فإن انتقص من الفريضة شيء قال الله انظروا لعبدي من تطوع فيكمل به ما نقص من الفريضة. (رواه الترمذي)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் மனிதனுடைய அமல்களில் முதலில் விசாரிக்கப்படுவது தொழுகையைப் பற்றியாகும். தொழுகை சீராக இருந்தால் அவன் வெற்றி பெற்று விட்டான், தொழுகை சீராக அமைய வில்லை என்றால் அவன் நஷ்டமடைந்து விட்டான். அவனுடைய (பர்ழ்) தொழுகையில் குறைபாடு இருந்தால், என்னுடைய அடியானின் சுன்னத்தான தொழுகையைப் பாருங்கள் அதைக் கொண்டு குறைப்பாட்டை நிரப்புங்கள் என்று அல்லாஹ் சொல்கிறான்.(ஆதாரம் : திர்மிதி : 413)

**பர்ளான தொழுகைகளின் முன் பின் ஸுன்னத்துக்கள் :**

| முன் | கடமையான தொழுகை | பின் |
|---|---|---|
| 2 | பஜ்ர்<br>• 2 ரக்அத்களையும் சுருக்குவது சிறந்தது.<br>• முதலாம் ரக்அத்தில் “குல் யாஅய்யுஹல் காபிரூன்” அத்தியாயமும் இரண்டாவது ரக்அத்தில் “குல் ஹுவல்லாஹு அஹத்” அத்தியாயமும் ஓதுவது சிறந்தது. | - |
| 4 | லுஹர் | 2 |
| - | அஸர் | - |
| - | ம.்.ரிப்<br>முதலாம் ரக்அத்தில் “குல் யாஅய்யுஹல் காபிரூன்” அத்தியாயமும் இரண்டாவது ரக்அத்தில் “குல் ஹுவல்லாஹு அஹத்” அத்தியாயமும் ஓதுவது சிறந்தது. | 2 |
| - | இஷா | 2 |

வித்ரு தொழுகை :

عن ابن عمر رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال: صلاة الليل مثنى مثنى فإذا خفت الصبح فأوتر" (رواه البخاري)

1. இரவுத் தொழுகை இரண்டு இரண்டு ரக்ஆதுகளாகும், நீ சுப்ஹு தொழுகை நெருங்கி விடுமென பயந்தால் வித்ரை (ஒற்றையாக) தொழுவாயாக என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் என இப்னு உமர் (ரலி) அறிவிக்கிறார்கள். (ஆதாரம் : புஹாரி 990, முஸ்லிம் 749)
2. நேரம்: இஷாவிற்குப் பிறகு பஜ்ர் தொழுகை வரை இரவில் இறுதிப் பகுதியில். தொழுவது சிறந்ததாகும்.
3. இத்தொழுகையில் நிலை, ருகூ∴, ஸுஜூது ஆகியவற்றை நீட்டித் தொழுவது சிறந்தது.
4. சில நேரங்களில் நபி (ஸல்) அவர்கள் 11 அல்லது 13 ரக்ஆதுகளும் தொழுதுள்ளார்கள்.
5. கடைசி மூன்று ரக்அத்களில் பின் வரும் சூராக்களை ஓதுவது ஸுன்னத்தாகும். ஸூரதுல் அ∴லா, ஸூரதுல் காபிரூன், ஸூரதுல் இ∴லாஸ்.

லுஹா தொழுகை :

عن أبي هريرة رضي الله عنه قال: أوصاني خليلي بصيام ثلاثة أيام من كل شهر وركعتي الضحى وأن أوتر قبل أن أرقد. (رواه البخاري ومسلم)

1-ஒவ்வொரு மாதமும் மூன்று நாள் நோன்பு வைக்குமாறும், இரண்டு ரக்ஆதுகள் லுஹா தொழுமாறும், உறங்கு முன் வித்ர் தொழுமாறும் நபி (ஸல்) அவர்கள் எனக்கு உபதேசம் செய்தார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம்: புஹாரி 1981, முஸ்லிம் 721.)
2- நேரம்: சூரியன் உதித்ததில் இருந்து சூரியன் நடு உச்சிக்கு வருமுன்.
3- இரண்டு முதல் எட்டு ரக்ஆதுகள் வரை தொழ அனுமதி உண்டு.

இஸ்திஹாரா தொழுகை

1-இரண்டு ரக்ஆதுகள் தொழ வேண்டும்.
2-அதன் பின் அவர் நாடிய விடயங்களை இறைவனிடம் பிரார்த்திப்பார்.
அதில் பின்வரும் துஆவை ஓதுவது சிறந்தது :

اللَّهُمَّ إِنِّي أَسْتَخِيرُكَ بِعِلْمِكَ وَأَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ وَأَسْأَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيمِ فَإِنَّكَ تَقْدِرُ وَلَا أَقْدِرُ وَتَعْلَمُ وَلَا أَعْلَمُ وَأَنْتَ عَلَّامُ الْغُيُوبِ اللَّهُمَّ إِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الْأَمْرَ خَيْرٌ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي أَوْ قَالَ عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ فَاقْدُرْهُ لِي وَيَسِّرْهُ لِي ثُمَّ بَارِكْ لِي فِيهِ وَإِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هَذَا الْأَمْرَ شَرٌّ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي أَوْ قَالَ فِي عَاجِلِ أَمْرِي وَآجِلِهِ فَاصْرِفْهُ عَنِّي وَاصْرِفْنِي عَنْهُ وَاقْدُرْ لِي الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ أَرْضِنِي.

அல்லாஹும்ம இன்னீ அஸ்தகீருக பிஇல்மிக வஅஸ்தக்திருக பிகுத்ரதிக வஅஸ்அலுக மின் பழ்லிகல் அளீம். பஇன்னக தக்திரு வலா அக்திரு வத∴லமு வலா அ∴லமு வஅன்த அல்லாமுல் குயூப். அல்லாஹும்ம இன்குன்த த∴லமு அன்ன ஹாதல் அம்ர கைருன் லீ பீ தீனீ வமஆஷீ வஆகிபதி அம்ரீ பக்துர்ஹு லீ, வயஸ்ஸிர்ஹு லீ, ஸும்ம பாரிக் லீ பீஹி. வஇன்குன்த த∴லமு அன்ன ஹாதல் அம்ர ஷர்ருன் லீ பீ தீனீ வமஆஷீ வஆகிபதி அம்ரீ பஸ்ரிப்ஹு அன்னீ, வஸ்ரிப்னீ அன்ஹு, வக்துர் லியல் கைர ஹய்ஸு கான, ஸும்ம அர்ழினீ. (புஹாரி 1162)
பொருள் : "இறைவா! உனக்கு ஞானம் இருப்பதால் உன்னிடம் நல்லதை வேண்டுகிறேன். உனக்கு வல்லமை இருப்பதால் உன்னிடம் வல்லமையை வேண்டுகிறேன். உன்னுடைய

மகத்தான அருளை உன்னிடம் வேண்டுகிறேன். நீ அனைத்திற்கும் அறிகிறாய். நான் அறிய மாட்டேன். இறவைா! என்னுடைய இந்தக் காரியம் (தன் தேவையை இந்த இடத்தில் குறிப்பிடுவார்) என்னுடைய மார்க்கத்திற்கும் என்னுடைய வாழ்க்கைக்கும் என்னுடைய மறுமைக்கும் சிறந்தது என்று நீ அறிந்தால் அதற்குரிய ஆற்றலை எனக்குத் தா, அதை எனக்கு இலகு படுத்திக் கொடு, பின்பு அதில் எனக்கு பரக்கத் செய். இந்தக் காரியம் (தன் தேவையை இந்த இடத்தில் குறிப்பிடுவார்)என்னுடைய மார்க்கத்திற்கும், என்னுடைய வாழ்க்கைக்கும், என்னுடைய மறுமைக்கும் கெட்டது என்று நீ அறிந்தால் என்னைவிட்டு இந்தக் காரியத்தையும், இந்தக் காரியத்தை விட்டு என்னையும் திருப்பி விடு. எங்கிருந்தாலும் எனக்கு நல்லவற்றிற்கு ஆற்றலைத் தா, பின்பு அதில் திருப்தியைத் தா.

### தஹிய்யதுல் மஸ்ஜித் (பள்ளிக் காணிக்கை தொழுகை):

عن أبي قتادة رضي الله عنه أن رسول الله صلى الله عليه وسلم قال: إذا دخل أحدكم المسجد فليركع ركعتين قبل أن يجلس" رواه البخاري)

உங்களில் எவர் பள்ளிக்குள் நுழைகிறாரோ அவர் இரண்டு ரக்ஆத்துகள் தொழும் வரை பள்ளியில் அமர வேண்டாம் என நபி (ஸல்) அவர்கள் சென்னதை அபூ கதாதா (ரலி) அறிவிக்கிறார்கள். (ஆதாரம் : புஹாரி 444)

### வுழூவிற்கான சுன்னத் தொழுகை

1.ஒரு ∴பஜ்ருத் தொழுகையின்போது பிலால்(ரலி) அவர்களிடம் “பிலாலே இஸ்லாத்தில் இணைந்த பின் நீர் செய்த சிறந்த அமல் பற்றிக் கூறும்! ஏனெனில் உம்முடைய செருப்போசையை சொர்க்கத்தில் கேட்டேன்” என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) “இரவிலோ, பகலிலோ நான் வுழூச் செய்தால் அவ்வுழூவின் மூலம் நான் தொழ வேண்டுமென்று நாடியதைத் தொழாமல் இருப்பதில்லை. இதுதான் என்னுடைய செயல்களில் சிறந்த செயல்” என்று விடையளித்தார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).
ஆதாரம் : புஹாரி 1149, முஸ்லிம் 2458.
2. வுளூவிற்குப் பிறகு அல்லது குளித்ததற்குப் பிறகு இரண்டு ரக்ஆதுகள் தொழுதல்.

### குர்ஆன் ஓதலுக்கான சுஜுது :

1.நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்யும் வசனத்தை எங்களுக்கு ஓதிக் காட்டும்போது அவர்கள் ஸஜ்தாச் செய்வார்கள். எங்களுக்கு நெற்றியை வைக்க இடமில்லாத அளவுக்கு நாங்கள் அனைவரும் ஸஜ்தாச் செய்வோம்.

அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)
ஆதாரம் : புஹாரி 1075, முஸ்லிம் 575.
2.ஸஜ்தா உள்ள ஆயத்துகளை ஓதினால் அல்லது கேட்டால் ஸஜ்தா செய்தல், குர்ஆனில் அவ்வாறான 14 அல்லது 15 இடங்கள் உள்ளன.

**நன்றிக்கான சுஜூது :**

عن أبي بكرة رضي الله عنه أن النبي صلى الله عليه وسلم كان إذا أتاه أمر يسره أو بشر به خر ساجداً شكراً لله تعالى. (رواه أبو داود وابن ماجة)

நபி (ஸல்) அவர்களுக்கு சந்தோஷம் ஏற்படுத்தும் செய்தி எத்தினால் அல்லது நன்மாராயம் கூறப்பட்டால், இறைவனுக்கு நன்றி செலுத்துவதற்காக உடனே சுஜூது செய்வார்கள் என அபூ பக்ரா (ரலி) அறிவிக்கிறார்கள். (ஆதாரம் : அபூ தாவூத் 2774, திர்மிதீ 1578)
குறிப்பு :நன்றிக்கான சுஜூது செய்வதற்கு வுழூ அவசியம் கிடையாது.

# தொழுகை தடுக்கப்பட்ட நேரங்கள்

1-பஜ்ர் தொழுகை முடிந்ததிலிருந்து சூரியன் ஒரு ஈட்டி அளவு உயரும் வரை
2-சூரியன் உச்ச நிலையை அடையும் போது.
3-அஸ்ர் தொழுகை முடிந்தலிருந்து சூரியன் மறையும் வரை

# நோயாளியின் தொழுகை

﴿ وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّينِ مِنْ حَرَجٍ ﴾ الحج: ٧٨

இந்த தீனில் (மார்க்கத்தில்) அவன் உங்களுக்கு எந்த சிரமத்தையும் ஏற்படுத்தவில்லை (அல் ஹஜ் : 78)

﴿ لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا ﴾ البقرة: ٢٨٦

அல்லாஹ் எந்த ஓர் ஆத்மாவிற்கும் அதன் சக்திக்குட்பட்டதைத் தவிர சிரமம் கொடுப்பதில்லை. (அல்பகரா : 286)

**நோயாளியின் தொழுகை முறை :**

قال عمران بن حصين رضي الله عنه: كانت بي بواسير فسألت النبي صلى الله عليه وسلم فقال: "صل قائما فإن لم تستطع فقاعدا فإن لم تستطع فعلى جنب". (رواه البخاري)

இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அவர்கள் சொல்கிறார்கள் எனக்கு பவாசீர் எனும் நோய் இருந்தது (அதாவது பின் துவாரத்தில் சிறு சிறு கட்டிகள்) எனவே நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டேன். நின்ற நிலையில் தொழு, அவ்வாறு உனக்கு முடியவில்லை என்றால் உட்கார்ந்து தொழு, அவ்வாறும் உனக்கு முடியவில்லை என்றால் மல்லாந்து படுத்த நிலையில் தொழவும் என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். (ஆதாரம் புஹாரி 1117)

- நோய்வாய்ப்பட்டவர் நின்ற நிலையில் தொழ முடியாது இருந்தால் உட்கார்ந்த வண்ணம் தொழலாம், அதுவும் முடியவில்லையென்றால் சாய்ந்த வண்ணம் தொழலாம். அவர் தலையை குனிந்து ருகூவு, சுஜூது செய்வார்.
- கடினமான நோய் காரணமாக குறித்த நேரத்தில் தொழுகையை நிறை வேற்ற முடியாமல் இருந்தால் இரண்டு தொழுகையை சேர்த்து ஒரு நேரத்தில் தொழலாம்.

# தொழுகை கடமையில்லாதவர்கள்

**தொழுகை கடமையில்லாதவா்கள் :**
1. பருவமடையாத சிறு பிள்ளைகள்.
2. பைத்தியகாரா்கள்.

**தொழுகை செல்லுபடியாகாதவா்கள் :**
1-மாதவிடாய் ஏற்பட்ட பெண்கள் சுத்தமாகி குளிக்கும் வரை.
2-பிரசவத்தீட்டு ஏற்பட்ட பெண்கள் சுத்தமாகி குளிக்கும் வரை.
3-சுய அறிவு இழந்தவர்கள் தெளிவடையும் வரை.

# பிரயாண தொழுகை

﴿ وَإِذَا ضَرَبْتُمْ فِي ٱلْأَرْضِ فَلَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَن تَقْصُرُوا۟ مِنَ ٱلصَّلَوٰةِ ﴾ النساء: ١٠١

நீங்கள் பூமியில் பிரயாணம் செய்தால் தொழுகையை சுருக்கிக் கொள்வது உங்களின் மீது குற்றமில்லை (அந்நிஸா : 101)

**சுருக்கியும், சேர்த்தும் தொழுதல் :**

| சுருக்கல், சேர்த்தல் | நேரம் |
|---|---|
| பஜ்ர் இரண்டு ரக்ஆத்துகள் சுருக்கியோ சேர்த்தோ தொழ அனுமதி இல்லை. | பஜ்ருடைய நேரம். |
| லுஹர் (இரண்டு),அஸ்ர் (இரண்டு) | இரண்டில் ஒரு நேரம். |
| ம∴ரிப் (மூன்று), இஷா (இரண்டு) | “ “ |

குறிப்பு

பாதையில் சென்று கொண்டிருக்காமல் ஓர் இடத்தில் தங்கினால் ஒவ்வொரு தொழுகையையும் அதற்குரிய நேரத்தில் சுருக்கித் தொழுவதே சிறந்ததாகும்.

**சுருக்கித் தொழுவதற்கான தூரம் :**
பிரயாணமென்று மனிதர்களுக்கு மத்தியில் அறியப்படும் தூரத்தை வைத்தே சுருக்கித் தொழப்படும்.
**குறிப்பு :**
பிரயாணி தன் ஊரை தாண்டியதுமே சுருக்கித் தொழுதல் ஆரம்பமாகும்.
**சுருக்கித் தொழுதலின் காலம்:**
பிரயாணி நிரந்தரமாக தங்குவதை நிய்யத் வைக்கும் வரை சுருக்கித் தொழ அனுமதியுண்டு.
**குறிப்பு :**
சென்றிருக்கும் ஊர்களில் பள்ளிவாசல் இருந்தால் பிரயாணி இமாமுடன் சேர்ந்து தொழுகையை பூர்த்தியாக தொழுவது கட்டாயமாகும்.
**பிரயாணத்தில் விரும்பத்தக்க அல்லது அனுமதிக்கப்பட்ட விடயங்கள் :**
1-தொடரான சுன்னத்துகளை விடுதல். (பஜ்ருடைய சுன்னத்தையும், வித்ரையும் விடாமல் இருப்பது சிறந்ததாகும்.)
2-ஜும்ஆ தொழுகையை விடுதல்.
3-நோன்பு காலங்களில் நோன்பை விடுதல்.
4-மூன்று நாள் அதன் இரவுகளுடன் கால் உறை மீது மஸ்ஹு செய்தல்

## இறைவனுக்கே எல்லாப் புகழும்